4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11] மதுரை 19-1-73 வெள்ளி [மலர் 16

பதிவு எண்: எம். 8798.

## அமைச்சர் இல்லம் முன் மறியல் 100 மாணவர் கைது

பாட்ணு, ஜன, 13—

இரண்டாயிரம் ஆயுர்வேத மாணவர்கள் ஊர்வலமாக வந்து பீகார்—மாநில சுகாதார அமைச்சர் இல்லம் முன் மறியல் செய்தனர். சுமார் 100 மாணவர்கள் கைது செய்யப்பட்டனர்.

பீகார் ஆயுர்வேத கல்லூரியைச் சேர்ந்த இம் மாணவர்கள், தேர்வுகளில் வெற்றி பெற்றவுடன் வேலை தரக்கோரியும், ஆயுர்வேதக் கல்லூரிகளை அரசு ஏற்கக் கோரியும் இந்த மறியல் நடந்தது. இக்கோரிக்கைகளுக்காக கடந்த 38 நாட்களாக வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

## மாநிலக் குழு கூட்டம்

மதுரை, ஜன. 18—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தமிழ் மாநிலக்குழுக் கூட்டம் ஜனவரி 22-ம் தேதி மதுரையில் நடைபெறுகிறது.

★ வகுப்புவாத அரசியல் நடத்தியவர்

★ ஊழல் ஆட்சி புரிந்தவர்

# காமராஜர் பற்றி எம். ஜி. ஆர்.

சென்னை, ஜன. 17—

**காமராஜர் முதல் அமைச்சராக இருந்தபோதும், காங்கிரஸ் தலைவராக இருந்தபோதும், தாங்கிக்கொள்ள முடியாத லஞ்ச ஊழல் நாட்டில் இருந்தது.**

**காமராஜர் ஆட்சியில்தான் ஜாதி அடிப்படையில் வேலை, வேண்டியவர்களுக்கு சலுகை, தேர்தலுக்கு அச்சுறுத்திப்பணம் வசூல் செய்தல் போன்ற நிலைமை இருந்தது. இப்படிப்பட்டவர் இன்று ஊழல் ஒன்றையே ஆயுதமாகக்கொண்டிருக்கிறார் என்று எம். ஜி. ஆர். சிவாஜி கணேசனுக்குப் பதில்கூறும்போது குறிப்பிட்டார்.**

எம். ஜி. ஆர். தனியாகக் கட்சி ஆரம்பித்தது தவறு என்றும், அவர் காமராஜரை சந்திக்காதது ஏன் என்றும சிவாஜிகணேசன் பேசியிருந்ததற்கு இன்று நிருபர்களிடையே அவர் கூறியதாவது:—

எந்த காமராஜர் ஆட்சியை எதிர்த்தோமோ, எந்த காமராஜர்ஆட்சியால் நான் தேர்தல் பிரசாரம் செய்தபோது சுடப்பட்டேனோ அந்த காமராஜர் ஆட்சியில் லஞ்சம், ஊழல் இருக்கிறது என்று — ராஜாஜியும், அண்ணாவும் - பேசினார்கள். அதை நம்பி மக்கள் எதிர்த்து 67-ல் தி. மு. க. ஆட்சியை அமைத்தார்கள். லஞ்சம் தோன்றுவதற்கு காரணம் காங்கிரஸ். வெங்கட்ராமன், காமராஜர் மீது லஞ்ச ஊழல் குற்றம் கூறாமல் இல்லை.

### சலுகை காட்டி தேர்தல் நிதி

காமராஜர் ஆட்சியின் போது ஜாதி அடிப்படையில் வேலை, வேண்டியவர்களுக்கு சலுகை, தேர்தலுக்கு அச்சுறுத்தல் பணம் வாங்குவது இவை இருந்தது.

இந்த ஆட்சியை லஞ்சத்தை ஒழிக்க அண்ணா வந்தார். அவருக்குப் பிறகு லஞ்சத்தை ஒழிக்கவேண்டியவர்களே அதை செய்து கொண்டு வருகிறார்கள்.

லஞ்சம் ஆரம்பமாவதற்கு காரணமாக இருந்தவர்களை எதிர்த்தோம். இப்பொழுது அவரிடம் எப்படி போய் எங்களுடைய முடிவை மாற்றிக்கொண்டு பேச முடியும்?

காங்கிரஸ் ஆட்சியில் காமராஜர் அமைச்சராக இருந்தபோது, காங்கிரஸ் தலைவராக இருந்தபோதும் தாங்கிக்கொள்ள முடியாத லஞ்ச ஊழல். அந்த சூழ்நிலையில்தான் லஞ்ச ஊழலை எதிர்த்து—மக்கள் அண்ணாவிடம் ஆட்சியை ஒப்படைத்தார்கள். ஊழலில்லாமலேயே இருந்ததே கிடையாது என்று கூறினர்.

### காமராஜரின் வகுப்புவாதம்

கேள்வி: காமராஜரும், "லஞ்சஊழல் லஞ்சஊழல்" என்று கூறிவருகிறாரே.

பதில்: அவர் அதைச் சொன்னால் தான் மக்கள் முன்னே நிற்க முடியும், வேறு ஆயுதம் கிடையாது. ஜாதிப்பிரச்னையைத்தூண்டிவிட்டவரே காமராஜர்தான். முதுகுளத்தூரில் தேவர்களை மட்டும் தான் சுட்டுத்தள்ளினார், முதுகுளத்தூரில் குற்றம் செய்தவர்கள் பலராக இருக்கலாம். ஆனால் தேவர்களை மட்டும் தான் சுடடார்கள்.

இப்பொழுது அ.தி.மு.க.வுக்கு வருகிறவர்களில் பெரும்பாலோர் சிண்டிகேட் கட்சியிலிருந்து வருகிறவர்கள் தான். மாணவர்கள், தொழிலாளர்கள் முதலியவர்களும் சிண்டிகேட் கட்சியில் இருந்துதான் வருகிறார்கள். அதனால் ஏற்பட்ட எரிச்சல், ஆத்திரம் காரணமாக சிண்டிகேட் கட்சித்தலைவர் காமராஜரும் மற்றவர்களும் அ. தி. மு. க. வை எதிர்க்கிறார்கள் என்றார்.

## பெற்ற தாயை கைது செய்த மகள்

பாலக்காடு, ஜன. 17—

கேரளத்தில் நடந்து வரும் அரசு ஊழியர் போராட்டத்தில், மறியல் செய்த தாயாரை, பெண் போலீசாகப் பணி புரியும் அவரது மகளே கைது செய்துள்ளார். இந்த நிகழ்ச்சி பாலக்காட்டில் நடந்தது.

இங்குள்ள "சிவில் லைன்ஸ்" கட்டிடத்தின் இரண்டாவது மாடியில் இயங்கி வரும் சிவில் கோர்ட் வாயில் முன் ஏராளமான பெண் ஊழியர்கள் மறியல் செய்தனர். இந்தப் பெண் ஊழியர்கள் அனைவரையும் பெண் போலீசார் கைது செய்தனர்.

இவர்களில், மண் வளப் பாதுகாப்பு அலுவலக ஊழியரான திருமதி செல்லாவை, பெண் போலீசாகப் பணியாற்றும் அவரது சொந்த மகள் திருமதி. மாதவி கைது செய்தார்.

# கேரளத்தில் வரலாறு காணாத பேரெழுச்சி

## போராடும் என். ஜி. ஓ. க்களுடன் 55 ஆயிரம் ஆசிரியர்களும் சேர்ந்தனர்

திருவனந்தபுரம், ஜன. 18—

**கேரளத்தில், மாநில அரசு ஊழியர்கள் நடத்தும் கால வரம்பற்ற வேலை நிறுத்தத்தில், நேற்று மாநிலம் முழுதும் உள்ள அரசுப் பள்ளிகளைச் சேர்ந்த 55 ஆயிரம் ஆசிரியர்களும் கலந்துகொண்டனர். 98 சத விகிதம் ஆசிரியர்கள் வேலைக்குச் செல்லவில்லை. அரசுப் பள்ளிகள் எல்லாம் ஸ்தம்பித்துப் போயின.**

ஆசிரியர்களின் வேலை நிறுத்தத்தை உடைப்பதற்காக முதலமைச்சர் அச்சுத மேனன் செய்த முயற்சிகளெல்லாம் தகர்ந்துவிட்டன.

ஒவ்வொருநாளும் மேலும் மேலும் அதிக அளவில் புதிதாக அரசு ஊழியர்கள் போராட்டத்தில் கலந்த வண்ணம் இருக்கின்றனர்.

தற்போது, மாநிலம் முழுதும் ஒன்னே முக்கால் லட்சத்துக்கு மேலானோர் வேலை நிறுத்தம் செய்துள்ளனர். நேற்று பல நூற்றுக்கணக்கானோர் கைது செய்யப்பட்டனர்.

### இ.காங்., வலது கம்யூ. ஊழியர்களும் வேலை நிறுத்தம்

கோட்டயம், திருச்சூர் மாவட்டங்களில் இந்திரா காங்கிரஸ் வலது கம்யூனிஸ்டுகளின் "கூட்டுக் கவுன்சிலில்" உள்ள அரசு ஊழியர்களும் வேலைநிறுத்தத்தில் சேர்ந்தனர்,

கோட்டயம் மாவட்டம் இண்டிகேட்— வலது கம்யூனிஸ்ட்டுகளின் "கூட்டுக கவுன்சிலை"ச் சேர்ந்த அரசாங்க ஊழியர்கள் 17-ம் தேதியன்று வேலை நிறுத்தத்தில் சேர்ந்தனர்.

இதன் மூலம். கோட்டயம் மாவட்டத்தில் இந்திரா காங்கிரஸ்—வலது கம்யூனிஸ்டுகளின் "கூட்டுக் கவுன்சில்" தகர்ந்துவிட்டது இம்மாவட்டத்துக்கு வர்க்கிப ஜோசப் என்பவரைக் கன்வீனராகக் கொண்ட "அட்ஹாக்கமிட்டி" தேர்ந்தெடுக்கப்பட்டது.

திருச்சூர் மாவட்டத்திலும் இண்டிகேட் - வலது கம்யூனிஸ்டுகள் சங்கத்தைச சேர்ந்த ஏராளமான அரசு ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் கலந்துகொண்டனர்.

### மருத்துவமனை ஊழியர்கள் வேலை நிறுத்தம்

மேலும், மருத்துவமனை ஊழியர்களும் — தங்களது கோரிக்கைகளை அரசு ஏற்காவிடில், மாநிலம் முழுவதும் வரும் 25-ம் தேதி முதல் காலவரம்பற்ற வேலை நிறுத்தம்செய்யப்போவதாக அறிவித்துள்ளனர்.

இது சம்பந்தமாக, மருத்துவமனை ஊழியர் சங்கம், அரசுக்கு நோட்டீஸ் கொடுத்துள்ளது

கேரளத்தில் அரசு ஊழியர்களின் காலவரம்பற்ற வேலை நிறுத்தம் துவங்கி இன்று 9-வது நாளாகிறது. ஜன. 10-ம் தேதியன்று வேலைநிறுத்தம் துவங்கியது.

### 4 லட்சம் பேர் பொது வேலை நிறுத்தம்

19-ம் தேதியன்று கேரள மாநிலம் முழுதும் 4 லட்சம் பேர் கலந்து கொள்ளும் பிரும்மாண்டமான பொது வேலை நிறுத்தம் நடக்கிறது.

## முதலமைச்சர் பதிலுக்கு பதில்கூறும் எம். ஜி. ஆர். மனு

சென்னை, ஜன. 79—

அ தி மு. க. வும், வலது கம்யூனிஸ்ட் கட்சியும்கூறிய ஊழல் புகார்களுக்கு முதலமைச்சர் கருணாநிதி அளித்த பதிலுக்கு பதில்கள் அடங்கிய பட்டியல் ஒன்றை பிரதம மந்திரியிடம் அ. தி. மு. க. கொள்கை பரப்புச் செயலர் திரு. சோமசுந்தரம் எம். பி., எம். ஜி. ஆர். சார்பில் ஜன 11.ல் அளித்துள்ளார்.

தற்பொழுது அளிக்கப்பட்டுள்ள பட்டியலில் வெள்ள நிவாரண நிதி ஊழல், தி. மு. க. அரசின் அராஜகம், முதலமைச்சரின் பத்திரிகை சம்பந்தப்பட்ட ஊழல்கள் அடங்கிய புதிய இரண்டு ஊழல் புகார் பட்டியல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

### வெள்ள நிவாரண நிதியிலும் ஊழலா?

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அளிக்கப்படும் வெள்ள நிவாரண நிதியில் ஊழல்கள் நடப்பதாக புகார் பட்டியலில் கூறப்பட்டுள்ளது. நிவாரண நிதிபாகுபாடின்றி அனைவருக்கும் கிடைக்கின்றதா எனக் கண்காணிக்க சர்வ கட்சியினர் அடங்கிய குழு ஒன்று அமைக்க வேண்டுமென்று மனுவில் கோரப்பட்டுள்ளது.

### அமைச்சர் பத்திரிகைக்கு அரசு அதிகாரம்

முதலமைச்சரின் பத்திரிகைக்கு விளம்பரம் சேகரிப்பதற்கும், விற்பனை செய்வதற்கும் தனது செல்வாக்கையும், அரசு அதிகாரத்தையும் பயன்படுத்துவதாகவும், இரண்டாவது புகாரில் கூறப்பட்டுள்ளது.

## ஜனவரி 25 முதல் 31 முடிய வியத்நாம் வாரம் கொண்டாடுக

### சி. ஐ. டி. யூ. தமிழ் மாநில குழு அறைகூவல்

மதுரை, ஜன. 17—

இம் மாதத்தின் கடைசி வாரத்தை "வியட்நாம் வாரமாக"க் கொண்டாடும்படி அனைத்துத் தொழிற் சங்கங்களுக்கும் சி. ஐ டி. யூ வின் தமிழ்மாநிலக் குழுச் செயலாளர் தோழர் ஆர். உமாநாத் வேண்டுகோள் விடுத்துள்ளார்

இது குறித்து அவர் செய்தித்தாட்களுக்கு விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் வடவியட்நாம்மீது நடத்திவரும் அட்டூழியமான வெடிகுண்டு வீச்சைத் தடுத்து நிறுத்துவதுபற்றியும், யுத்த நிறுத்தத்துக்கு சம்மதிக்கும்படி அவர்களை நிர்ப்பந்திப்பதுபற்றியும் வட வியட்நாம் தொழிற்சங்க சம்மேளனத்துக்கும் சி. ஐ டி. யூ. மையத்துக்கும் இடையில்நடைபெற்றுள்ள செய்திப் பரிவர்த்தனையை பத்திரிகையில் பார்த்திருப்பீர்கள். இது சம்பந்தமாக தோழர்கள் பி. டி. ரணதிவேயும் பி. ராமமூர்த்தியும் வெளியிட்டுள்ள அறிக்கையையும் பார்த்திருப்பீர்கள்.

தமிழகத்தில் ஜனவரி 25 முதல் 31 வரை வியத்நாம் வாரமாகக் கொண்டாடுவதற்கு எல்லா சி. ஐ. டி. யூ. சங்கங்களும் அவசரஉணர்வுடன் முன்முயற்சி எடுக்க வேண்டும். ஸ்தலத்திலுள்ள இதர எல்லா சங்கங்களையும் அணுகவேண்டும். இந்த வாரத்தில் அனைவரும் ஒத்துக்கொள்ளும் ஒரு தினத்தை வியத்நாம் தினமாகக் கொண்டாடி, மாபெரும் ஊர்வலம்—ஆர்ப்பாட்டங்களுக்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

இதற்கு மத்தியில், அந்த வாரம் முழுவதும் பல இடங்களில் கூட்டங்கள் நடத்தியும் பலவித பிரசார முறைகள் மூலமும் வியட்நாம் மக்களுக்கு ஆதரவான இயக்கத்தை நம் சங்கங்கள் திட்டமிட்டு நடத்தவேண்டுகிறேன்.

எல்லா தொழிற் சங்கங்களும் ஏற்றுக் கொள்ளும் இந்த வியட்நாம் ஆதரவுப் பிரச்சனையில், தமிழக முழுவதும் ஒன்றுபட்ட நடவடிக்கையைமேற்கொள்ள ஒத்துழைக்குமாறு சகல தொழிற் சங்க மையங்களையும் வேண்டிக் கொள்கிறேன்.

இவ்வாறு தமது அறிக்கையில் தோழர் உமாநாத் கூறியுள்ளார்.

## ஜனதிபதி ஆட்சி

### ஆந்திர மந்திரி சபைக்கு கல்தா

ஹைதராபாத், ஜன. 18—

ஆந்திரப் பிரதேச முதலமைச்சர் நரசிம்மராவ் காங்கிரஸ் மேலிட நிர்ப்பந்தத்தின் பேரில் நேற்று ராஜினமாச் செய்தார். இந்திரா காந்தியால், ஆந்திர பிரதேச முதலமைச்சராக ஆந்திரக் காங்கிரஸ் சட்டசபை எம் எல். ஏ. க்கள் மீது திணிக்கப்பட்டவர், இவர்.

பிருமானந்த ரெட்டியை ஒழித்துக்கட்டுவதற்காக இந்திரா காந்தி அன்று புரிந்த சாகசம்இது. ஆனால் அவர் எதிர்பார்த்தற்கு மாறாக, நரசிம்மராவ் தான் பதவியில் அமர்ந்த 15 மாதத்திற்குள்ளாகவே தன் கட்சியின் வெறுப்பிற்கு உள்ளானர்.

காரணம் இந்திரா காந்தியின் கொள்கையை அமுல் நடத்தினர் தனக்கு இந்திராவின் ஆதரவு இருக்கிறது என்பதால் தன் விருப்பம் போல் நடந்து கொண்டார். இன்று தனனை நியமித்த அதே மேலிடத்தின் நிர்ப்பந்தத்தின் பேரில் வெளியேறினர்.

இதையடுத்து' இன்று ஜனதிபதி ஆட்சி பிரகடனப்படுத்தப்படுகிறது. இதன் மூலம் ஆந்திரத்தில் அமைதியை நிலைநாட்டிவிடலாம், "முல்கி" பிரச்னைக்கு தீர்வு கண்டுவிடலாம் என்று காங்கிரஸ் மேலிடம் நினைக்கிறது.

ஆனல் ஆந்திரபிரதேசத்திலுள்ள காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள், எம். பி.க்கள் பலர் காங்கிரசிலிருந்து ராஜினமாச் செய்வதுடன், தங்களது பதவிகளையும் ராஜினமாச் செய்து வருகிறார்கள்.

## தொழிற் சங்க உரிமைகளை பாதுகாப்போம்

### அஸ்ஸாமில் அனைத்து சங்கங்களின் மாநாடு

கௌஹாத்தி, ஜன, 17—

தொழிற்சங்கங்களின் ஜனநாயக உரிமைகளைப் பாதுகாக்க அஸ்ஸாம் மாநிலத்திலுள்ள அனைத்து தொழிற்சங்கங்களும் ஒன்றுபட்டு போராட முடிவு செய்துள்ளன.

இப் போராட்டத்திற்கான திட்டம் வகுக்கும் முறையில் கௌஹாத்தி நகரில் ஜனவரி 21,22 ஆகியதேதிகளில் ஒரு பிருமாண்டமான மாநாடு நடத்த பல்வேறு அரசியல் கட்சிகளின் சார்புடைய 50க்கும் மேற்பட்ட தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகள் முடிவு செய்துள்ளனர்.

### விரிவான திட்டம் வகுக்க

அனைத்து தொழிற்சங்கங்களின் சார்பில்நடைபெற்ற இந்த மாநாட்டில்,

அகதிகளுக்காக போடப்பட்ட வரியை வாபஸ் பெற வேண்டும்.

தேவைக்கேற்ற குறைந்த பட்ச சம்பளம்—அனைவருக்கும் வேலை அல்லது அதுவரையில் உதவித்தொகை- விலைவாசிப் புள்ளி மோசடியைத் திருத்தப்படவேண்டும்— மூடிக்கிடக்கும் மில்களையும், தொழிற்சாலைகளையும் திறக்கவேண்டும்.--விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த வேண்டும் போன்ற பல முக்கியமான கோரிக்கைகளை முன்வைத்துப் போராடுவதற்கான விரிவான திட்டம் வகுக்கப்படும் என்று அஸ்ஸாம் மாநில தொழிற்சங்க ஜனநாயக உரிமை பாதுகாப்புக் குழு அறிவித்துள்ளது.

### தலைவர்கள் வருகை

அனைத்து தொழிற்சங்கங்களின் இந்த மாநாட்டில் மாநில முழுவதிலுமுள்ள பல்வேறு அரசியல் சார்புடைய தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகள் 300க்கும் அதிகமானோர் கலந்து கொள்வர். மற்றும் மிஜோராம், மணிப்பூர், நாகாலாந்து, மேகாலயா, அருணசலப் பிரதேசத்திலிருந்தும தொழிற் சங்கப் பிரதிநிதிகள் கலந்துகொள்வர் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தமாநாட்டில் தொழிற் சங்கங்களின் ஐக்கிய கவுன்சிலின் அமைப்பாளர் திரு. ஜார்ஜ் பெர்னண்டசும், தபால், தந்தி ஊழியர் சம்மேளனத்தின் தலைவர் திரு. கே. ஜி. போஸ் மற்றும் பல சி. ஐ. டி. யூ. தலைவர்களும் கலந்துகொள்கிறார்கள்.

## ஏகபோக கட்டுப்பாடு கமிசனின் புதிய தலைவர்

புதுடெல்லி. ஜன. 17—

இந்திய அரசாங்கம் நியமித்துள்ள கண்துடைப்பு கமிசனான ஏகபோக முதலாளிகளின் கட்டுப்பாட்டுக் கமிசனின் புதிய தலைவராக திரு. வி. ஆர். கிருஷ்ண அய்யர் நியமிக்கப்பட்டார்.

இவர் தற்போது இந்திய சட்டக் கமிசனின் ஒரு உறுப்பினராக உள்ளார். ஏகபோக முதலாளிகளின் கட்டுப்பாட்டுக் கமிஷனின் தலைவராகஇருந்த திரு. அழகிரிசாமி ஓய்வு பெற்றதைத் தொடர்ந்தே திரு. வி. ஆர். கிருஷ்ணய்யர் புதிய தலைவராகநியமிக்கப்பட்டுள்ளார்.

## தமிழகத்தில் தோழர் பி.ராமமூர்த்தி சுற்றுப் பயணம்

ஜன. 21— திண்டுக்கல்

„ 24— தஞ்சை மாவட்டம்

„ 25— தென்னுற்காடு மாவட்டம்

„ 26— தர்மபுரி மாவட்டம்

„ 27— கோவை மாவட்டம்

„ 28— திருச்சி மாவட்டம்

„ 30— வேலூர் (வ. ஆ.)

தீக்கதிர்

## மீண்டும் ஜனநாயக படுகொலை

"பாரதத் திருநாட்டின் ஒற்றுமை சிதைந்து சீர்குலையாதிருக்க வேண்டுமானால், காங்கிரசுக்கே வாக்களியுங்கள்"

இவ்வாறு நம்நாட்டு ஒற்றுமையில் "உறுதியான" நம்பிக்கையுடையதென அறிவித்த காங்கிரஸ் ஒரு சில மாதங்களுக்கு முன் அமோக வெற்றி பெற்றது. ஆனால் பாரத ஒற்றுமை இருக்கட்டும்; ஒரு மாநிலத்தின்—ஆந்திரப் பிரதேசத்தின்—ஒற்றுமையைப் பாதுகாக்க முடியாமல் அதைச் சீர்குலைத்துச் சிதைத்திடும் பாதையில் இன்று அடி எடுத்து வைத்து வெகுவேகமாக முன்னேறிக்கொண்டிருக்கிறது காங்கிரஸ்.

நேற்றுவரை உதவி முதலமைச்சராக இருந்த பி. வி. சுப்பரெட்டியிலிருந்து—சிண்டிக்கேட்டிலிருந்து ஒதுங்கியிருந்த சஞ்சீவி ரெட்டி வரை அனைத்து ஆந்திர பிரதேச காங்கிரஸ்காரர்களும் ஆந்திரத்தை தெலிங்கானாவிலிருந்து பிரித்தேதீருவோம் என்ற "கோதாவில்" இறங்கி விட்டனர்.

ஆந்திரப் பிரதேச காங்கிரஸ் எம். எல். ஏக்கள் அனைவரும் ராஜினாமா செய்வது அவர்களது 'பிரிவினை'ப் போராட்டத்தின் ஒரு பகுதியே.

இவ்வாறு பிரிவினையாளர்களின் நிர்ப்பந்தம் தீவிரமாகும்போது காங்கிரஸ் மேலிடம், தெலுங்கானாவைச் சார்ந்த நரசிம்மராவ் தலைமையிலுள்ள மந்திரி சபையை நீக்கிவிட்டு, டில்லியின் நேரடி ஆட்சி (ஜனாதிபதி ஆட்சி) ஏற்படுத்தி விட்டால் ஆந்திர பிரதேச ஒற்றுமையை பாதுகாத்து விடலாம் என்று பகற்கனவு காணுகிறது.

இதைவிடக் கேவலமான, ஜனநாயக விரோதச் செயல் வேறு எதுவும் இருக்க முடியாது.

இந்திரா காந்தியின் சொல்படி நடக்காத மாற்றுக் கட்சிமந்திரிசபையல்ல அங்குபதவியில் இருப்பது. ஹைதராபாத்தில் ஆட்சி புரிவதும் காங்கிரஸ்காரர்கள்தாம்; டெல்லியிலே ஆட்சி புரிவதும் காங்கிரஸ்காரர்கள்தாம். அப்படி இருந்தும ஜனாதிபதி ஆட்சி பிரகடனம் செய்வது ஏன்?

ஆந்திரப் பிரதேச அமைச்சரவையின் தோல்வி காங்கிரஸ் தலைமைப்பீடத்தின் தோல்வி அல்ல என்று கூற முடியுமா? எனினும் இந்த உண்மையை மறைக்கவே, ஜனாதிபதி ஆட்சி என்ற ஜனநாயகப் படுகொலை நடத்த காங்கிரஸ் தலைமை முன் வந்துவிட்டது.

ஆந்திர நிகழ்ச்சிகள் தரும் படிப்பினை என்ன?

காங்கிரஸ் தலைமையால் ஒரே மொழி பேசிடும் மக்களது ஒற்றுமையைக் கூடப் பாதுகாக்க முடியாது என்பதே.

ஒரு மொழி மாநில ஒற்றுமையையே பாதுகாக்க முடியாத காங்கிரஸ் பன்மொழி பேசிடும் பாரத நாட்டின் ஒற்றுமையைப் பாதுகாக்க முடியுமா?

முடியாது என்பதற்கு பல மாநில காங்கிரஸ் தலைவர்கள் "சிவசேனாவின் தத்துவத்தை" அமுல் நடத்தப் போவதாக அறிவித்ததே சான்று. "எங்கள் மாநிலத்தவருக்கே எங்கள் ஆட்சியில் வேலை" என்று பல காங்கிரஸ் முதலமைச்சர்கள் பேசியதே இதற்குச் சான்று.

காங்கிரஸ் தலைமை வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினையை தீர்க்க முடியாத ஒரு கொள்கையை- பெரு முதலாளிகளைத் திட்டமிட்டு வளர்க்கும் ஒருகொள்கையை—பின்பற்றுவதால்தான், அது ஆந்திரத்தில் "முல்கி" பிரச்னையாகவும், மராட்டியத்தில் மராட்டிய இனவெறியாகவும், மைசூரில் "எங்க மாநிலத்தவருக்கே இங்கு வேலை" என்பதாகவும் இன வெறியாட்டங்களாக தேசிய ஒற்றுமைக்கு வேட்டுவைக்கும் சீர்குலைவுகளாக விஸ்வரூபமெடுக்கின்றன.

நாட்டு ஒற்றுமையின் சீர்குலைவிற்குப் பொறுப்பாளிகள் யார்? இந்திராகாந்தி தலைமையிலுள்ள காங்கிரஸ்; அதன் ஜனநாயக விரோதக்கொள்கை.

அதனால்தான்,

கேரளத்திலும், ஆந்திரத்திலும் ஜனநாயகப் படுகொலை செய்த அதே வழிமுறைகளை தன் கட்சி தலைமையிலுள்ள ஆந்திரத்திலும் பின்பற்றுகிறது. வினைவிதைப்பவன் தினையா அறுப்பான?

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வலியுறுத்தும் ஜனநாயக வழியில்நின்று பிரச்சினையைத் தீர்க்க முன்வராத காங்கிரஸ், அவர்கள் எடுக்கப்போகும ஜனநாயக விரோத—ஜனாதிபதி ஆட்சி மூலம் தீர்த்துவிட முடியுமா?

ஜனநாயகத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் காங்கிரஸ்காரர்கள்; நாட்டு ஒற்றுமையில நம்பிக்கையில்லாதவர்கள் காங்கிரஸ்காரர்கள்; சகலருக்கும் வேலைதரும் கொள்கையற்றவர்கள் காங்கிரஸ்காரர்கள்; பதவிப்பித்தும் சுயநல நோக்கமுடையவர்கள் காங்கிரஸ்காரர்கள். அதனால் அங்கே இந்த நெருக்கடி.

## 'திண்ணைப்பேச்சு வீரரிடம் கண்ணாயிருக்கணும்அண்ணாச்சி'

### பட்டுக்கோட்டை நினைவு மன்ற விழா

கோவை, ஜன. 15—
சொக்கம்புதூரில பட்டுக்கோட்டை கலியாணசுந்தரம நினைவு மன்றத்தின் இரண்டாம ஆண்டு விழா நடைபெற்றது. கோவை, நீலகிரி, சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணியின் கொடியை (சிவப்பு நிறக் கொடியில் இடதுபுறத்தின் உச்சியில் ஐந்து முனை வெள்ளைநிறத்தில நட்சத்திரம பொறிக்கப்பட்ட கொடி) ஜில்லா கமிட்டி உறுப்பினரும், கட்சி அலுவலக செயலாளருமான தோழர் எம். பழனிசாமி பலத்த கரகோஷத்திற்கிடையே ஏற்றி வைத்தார். பின்னர் கட்சிக்கொடியை, கட்சி ஜில்லா கமிட்டி உறுப்பினர் தோழர் கே. காரமடை, பலத்தகரகோஷத்திற்கிடையேஏற்றிவைத்தார். கடைசியாக நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் எல்லோரையும வரவேற்று தோழர் டி. கே. சாமி பேசினார். தோழர் எம். நடராஜன் கூட்டத்திற்கு தலைமை வகித்தார்.

ஆண்டறிக்கையை தோழர் என். வீரச்சந்திரன் வாசித்தார்.

பின்னர், தோழர் கே. காரமடை விவசாயத் தொழிலாளர் போராட்டத்தைப் பற்றியும், அதில் கிடைத்தவெற்றியைப் பற்றியும் விளக்கிப் பேசினார்.

இறுதியாக தோழர் எம். பழனிசாமி பேசுகையில், பட்டுக்கோட்டையின் பாடலில் "திண்ணைப் பேச்சு வீரரிடம் ஒரு கண்ணாயிருக்கணும் அண்ணாச்சி" என்றார். எப்படி இந்திராகாந்தி வெற்றுக் கோஷங்களை தேர்தல் காலத்தில் கூறினார் அல்லவா, விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பற்றியும், அதை ஒழிக்கப் போவதாக வானளாவப் பேசினார்களே, ஆட்சிபீடத்திலே அமர்ந்தவுடனே என்ன செய்தார்கள் என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும்" என்றார்.

### மின் பொறியாளர் வேலை நிறுத்தம்

## உ. பி. மாநிலமே இருளில் மூழ்கியது

### ரயில், தந்தி, டெலிபோன் செயல்படவில்லை

### தொழிற்சாலைகள் பாதிப்பு

லக்னோ, ஜன. 17—
உத்திரப் பிரதேசத்தில் நேற்று முதல நடந்துவரும் மின் பொறியாளர் (என்சீனியர்களின்) வேலை நிறுத்தம் காரணமாக ஏறத்தாழ மாநிலம் முழுவதும் இருளில மூழ்கியது. விவசாய வேலைகள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளன. ரயில் போக்குவரத்து அப்படியே ஸ்தம்பித்துள்ளது. தந்தி, டெலிபோன் தொடர்புகள் பாதிக்கப்பட்டுள்ளன.

பெரிய, நடுத்தரத் தொழிற்சாலைகள் 3800-ம், சிறிய தொழிற்சாலைகள் 3000-ம் செயல்படவில்லை.

ஊதியக் குழு அமைக்க வேண்டும் என்றும், தங்களது ஊதியத்தை உயர்த்த வேண்டும் என்றும் மற்றும் பல கோரிக்கைகளுக்காக இந்த வேலை நிறுத்தம நடக்கிறது.

வேலை நிறுத்தத்தை முறியடிக்க மாநில இந்திரா காங்கிரஸ் அரசாங்கம் பழிவாங்கும் நடவடிக்கையில் இறங்கியுள்ளது. இதுவரை 15 உதவி என்ஜீனியர்கள், 2 நிர்வாக என்ஜினியர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளனர். சூப்ரெண்டிங் என்ஜீனியர்கள் இருவர் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர். கான்பூரில் 34 என்ஜினியர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

வேலை நிறுத்தம் செய்யும் என்ஜினியர்கள் அனைவரும் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள் என்றும், புதிய என்ஜினியர்களைச் சேர்க்க விளம்பரம் கொடுக்கப்படும் என்றும் மின் வாரியத் தலைவர் பயமுறுத்தியுள்ளார்.

மின்துறை அத்தியாவசிய சர்வீசாக அறிவித்து வேலை நிறுத்தம் செய்யும் என்ஜினியர்களை இந்தியத் தற்காப்பு விதிகளின் கீழ் கைது செய்து வழக்குப் போடும்படி அரசாங்கம் உத்தரவிட்டுள்ளது.

வேலை நிறுத்தத்தைச் சமாளிக்க என்று கூறி, இராணுவத்தினரும் கடற்படையினரும் வரவழைக்கப் பட்டுள்ளனர்.

## வியட்நாம் பற்றிய செய்திகள்

ஸ்டாக்ஹோம், ஜன, 17—
பாரிசில் நடந்த சமாதானப் பேச்சு வார்த்தையில் கிட்டத்தட்ட அக்டோபர் 20-ம் நாள் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் அடிப்படையில் அமெரிக்கப் பிரதிநிதிக்கும் வியத்நாம் பிரதிநிதிககுமிடையே ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளதாக வட வியத்நாமின் தலைநகரான ஹனாயில் "நான் தான்" என்ற நாளிதழின் ஆசிரியர் தம்மிடம் தெரிவித்ததாக நார்வேயிலிருந்து சென்று திரும்பிய தூது கோஷ்டி இன்று தெரிவித்தது.

இவ்வாறு இரண்டாந் தட்வையாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள ஒப்பந்தத்தில் கையெழுத்திட வியத்நாம் பிரதிநிதிகள் தயாராக இருப்பதாகவும்அக்கோஷ்டி அறிவித்தது.

### கிசிங்கர் திரும்பமாட்டாராம்

வாஷிங்டன். ஜன 17—
வடவியட்நாம் பிரதிநிதியுடன் பாரிசில் பேச்சுவார்த்தை நடத்தியபின், நிக்சனை சந்தித்துப் பேசினார். டாக்டர் கிசிஞ்கர் அதன் பிறகு தெற்கு வியத்நாம் பொமமை ஜனாதிபதி தியூவைசந்திக்க சைகோன் சென்றார்.

அமெரிக்காவுக்கு திரும்பி வந்துள்ள கிசிங்கர் மீண்டும் இந்த வாரத்திலோ அல்லது அடுத்த வாரத்திலோ பாரிசிற்குப்போகமாட்டார் என்று நிக்சனின் காரியதரிசி அறிவிக்கிறார்.

### அமெரிக்க அலுவலகத்தினுள்

## நுழைந்து ஆர்ப்பாட்டம்

### குண்டு வீச்சுக்கு கண்டனம்

ஆம்ஸ்டர்டாம், (நெதர்லாந்து) ஜன. 18—
வியட்நாமில் அமெரிக்காவின் கண்மூடித் தனமான குண்டு வீச்சைக்கண்டித்து ஜன. 15ந்தேதி காலையில் இங்குள்ள அமெரிக்கப் பிரதிநிதி அலுவலகத்தினுள் நுழைந்து நூற்றுக் கணக்கானோர் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

2 மணி நேரம் ஆர்ப்பாட்டம் நடந்தது. போலீசார் அவசர வழியாக உள்ளே சென்று ஆர்ப்பாட்டக்காரர்களை அகற்றி போலீஸ் ஸ்டேசனுக்கு அழைத்துச் சென்றனர். அவர்களில் இருவர் அமெரிக்க பாஸ்போர்ட் வைத்திருந்தனர்.

பல நாட்களாக அமெரிக்கப் பிரதிநிதி அலுவலகம் முன் தொடர்ந்து ஆர்ப்பாட்டங்கள் நடந்து வந்தன.

## புள்ளி விவர மோசடி

### சம்பளமுடக்ககொள்கையின்ஒருபகுதியே

### காங்கிரஸ் அரசின் சதிபற்றி தோழர் எஸ். ஒய். கோல்காட்கர்

பம்பாய், ஜன 17,
இந்திய அரசாங்கம்1972ம் ஆண்டின் இறுதிப்பகுதியான அக்டோபர் மாதம் முதல் டிசம்பர் வரையுள்ள; மக்கள் அன்றாடம் உபயோகிக்கும் பொருட்களின் விலைவாசிப்புள்ளி கணக்கை இன்னும வெளியிடவில்லை.

1972ம் ஆண்டு முடிந்த பின்னர் கூட இந்திய அரசாங்கம், உபயோகிக்கும் பொருட்களின் விலைவாசிப் புள்ளி கணக்கை வெளியிடாததை மராட்டிய மாநில சி. ஐ. டி. யூ தலைவர் தோழர் எஸ். ஒய். கோல்காட்கர் வன்மையாகக் கண்டித்தார்.

### நாணயமில் குளறுபடி

மத்திய அரசும், மாநில அரசும் எடுக்கும் புள்ளி விபரக் கணக்குகளிலுள்ள வேறுபாடுகள் இன்னும் களையப்படாமல் தொடர்ந்து நீடித்துக் கொண்டிருக்கிறது. உதாரணமாக1971ம் ஆண்டிற்கான மராட்டிய மாநில விலை வாசிப்புள்ளி 15 புள்ளிகள் உயர்ந்துள்ளன எனக்காட்டுகிறது அதே சமயத்தில் கல்கத்தா நகர விலைவாசிப் புள்ளி 24 புள்ளிகள் உயர்வையும், சென்னை நகர விலைவாசிப் புள்ளி 18 புள்ளிகள் உயர்வையும் காட்டுகிறது.

ஆனால் அதே சமயத்தில் மத்திய அரசின் விலைவாசிப் புள்ளி கணக்கு விலைவாசி

(8-ம் பத்தி பார்க்க)

### பங்களா தேஷ் சுதந்திரத்துக்கு குழிபறிக்க

# ஏகாதிபத்திய சதிகள்

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு எச்சரிக்கை

கல்கத்தா, ஜன. 17—

**சென்ற வாரம் கல்கத்தாவில் கூடிய இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்சிஸ்ட்) அரசியல் தலைமைக் குழுவான (பொலிட்பீரோ) கூட்டம், பங்களாதேஷ்பற்றி பின்வரும் தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது.**

பங்களாதேஷ் மக்களுக்கு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்சிஸ்ட்) பொலிட் பீரோ தனது பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறது. 1971-ம் ஆண்டில் ஏற்பட்ட மிகப்பெரிய களபலிகளுக்கும்—இப்போது அங்கு கொடிய பொருளாதார இன்னல்களுக்கும், துன்ப துயரங்களுக்கும், பசி பட்டினிகளுக்கும் ஆளாகித் தவிக்கும் பங்களா தேஷ் பாட்டாளி மக்களுக்கும் விவசாயிகளுக்கும் பொலிட் பீரோ நல்வாழ்வு பெற வாழ்த்துக் கூறுகிறது.

### தேச விடுதலைக்குப் போராடிய மக்களை பட்டினி போடுவதா?

பங்களா தேஷ் மக்கள், இன்று தங்களது நாட்டின் எல்லைகளின் இரு புறத்திலும் உள்ள பேராசை வெறி பிடித்த கள்ள மார்க்கெட்காரர்களுக்கும், வியாபாரிகளுக்கும் லஞ்ச ஊழலில் மூழ்கிக் கிடக்கும் அதிகார வர்க்கத்தினருக்கும் இரையாகிக் கிடக்கிறார்கள். யாகியாவை வீழ்ச்சியுறச் செய்தவர் எவரோ, அதே போராட்ட வீரர்களுக்கு எதிராகவே, துப்பாக்கிச் சூடும், அரசாங்கத்தின் இதர அடக்குமுறைகளும் ஏவி விடப்பட்டிருப்பதைக் கண்டு, பொலிட்பீரோ தனது அதிர்ச்சியையும் ஆவேச கோபத்தையும் தெரிவித்துக்கொள்ளுகிறது. குறிப்பாக, வியட்நாம் மக்களையே படுகொலை செய்யும்படியான இனக் கொலை வெறியில், குண்டு வீச்சு நடத்திடும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்த்து, சட்ட பூர்வமாக கண்டன ஆர்ப்பாட்டம் செய்த மாணவர்கள் மீது, வேண்டுமென்றே துப்பாக்கிச் சூடு நடத்தியதை வன்மையாகக் கண்டிக்கிறோம்.

### சுதந்திரத்தை அடகுவைக்கும் போக்கு

"நாட்டினுடைய சுதந்திரத்தையும், சுயேச்சையையும் கட்டிப்பலப்படுத்த வேண்டிய காரியம், இனிமேல்தான் செய்யப்படவேண்டியிருக்கிறது. இந்த நிலையில், ஜனநாயக சக்திகளையும், ஜனநாயக எதிர்க்கட்சிகளையும நசுக்குவதானது, தவிர்க்க முடியாதபடி, சுதந்திரத்தையும் சுயேச்சையையும் சமரசம் செய்வதில் கொண்டுபோய் விடும் என்று பொலிட்பீரோ எச்சரிக்கை செய்கிறது. முன்னாள் இராணுவ ஆட்சியின் ஏஜெண்டுகள் சுறுசுறுப்பாக இருக்கிறார்கள். அமெரிக்க ஏகாதிபத்யவாதிகள தங்களுடைய நடவடிக்கைகளை விரிவாக்கி வருகிறார்கள். பொருளாதார உதவிகளைப் புரிவதிலே விறுவிறுப்புக் காட்டுவது போல் பாசாங்கு செய்துவரும் ஏகாதிபத்தியக்கும்பல், தங்களுடைய ஏஜெண்டுகளுக்கு காசு பணம் கொடுத்தும், ஆதரவு அளித்தும், பங்களாதேஷின் சுதந்திரத்துக்கும, சுயேச்சைத்தன்மைக்கும் குழி பறித்துக் கொண்டிருக்கிறார்கள்.

### அமெரிக்கவின் பிளவு சூழ்ச்சிகள்

நிலைமை இப்படி இருக்கும்போது, அமெரிக்க எகாதிபத்தியவாதிகளின் சூழ்ச்சிகளை யாராவது மறந்து விடுவார்களேயானால், அவர்கள் அந்த ஏகாதிபத்யவாதிகளுக்கும், மற்றுமுள்ள பிற்போக்கு சக்திகளும் உதவியளிக்கவந்தவர்களாகவே ஆவார்கள். அமெரிக்கர்கள் ஒரு விஷயத்தை நன்கறிவார்கள். அதாவது, இந்தியாவிலுள்ள ஜனநாயக இயக்கங்களும், பங்களாதேஷிலுள்ள ஜனநாயக இயக்கங்களும் சேர்ந்து ஒன்றுக்கொன்று இணங்கி ஐக்கியமாகச் செயல்பட்டதின் விளைவாகத்தான் பங்களாதேஷ வெற்றிவாகைசூட முடிந்தது என்பதை அமெரிக்கர்கள அறிந்துள்ளார்கள். அதனால்தான், இந்த இரு நாடுகளிலுள்ள ஜனநாயக இயக்கங்களுக்கிடையே வேற்றுமையை விதைத்திட, இடைவிடாது முயற்சித்து வருகிறார்கள்.

### பிளவுக்கு தவறுகளை பயன்படுத்துகிறார்கள்

இந்தியாவிலுள்ள சில வியாபாரிகள் புரிந்து வரும் தவறுகளையும், இந்திய சர்க்கார் எடுத்துவரும் சில நடவடிக்கைகளையும், அந்தப் பிற்போக்கு கும்பல் பயன்படுத்திக் கொண்டு—இரு நாடுகளின் ஜனநாயக மக்களுக்கும் இடையிலான சகோதர ஒற்றுமைக்கும் குழிபறிக்கப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். இது பங்களாதேஷ் சுதந்திரத்தின் உண்மையான பகைவர்களுக்கு உதவுவதாகத்தான் இருக்கிறது.

### உஷாராக இருங்கள் ஒற்றுமையை நாட்டுங்கள்

விவஸ்தை கெட்ட சில இந்திய வியாபாரிகளின் செயல்களை எதிர்த்தும், இந்திய அரசாங்கத்தின் சில நடவடிக்கைகளை எதிர்த்தும், பங்களாதேஷ் ஜனநாயக சக்திகள் விழிப்புணர்ச்சியோடு விட்டுக் கொடுக்காமல் போராடவேண்டும். இப்படிப்பட்டபோராட்டத்தைநடத்திக் கொண்டே, இரு நாடுகளின் ஜனநாயக இயக்கங்களுக்கிடையிலான சகோதர ஒற்றுமையைப் பாதுகாக்க வேண்டுமென்று பொலீட்பீரோ கேட்டுக் கொள்ளுவதுடன், பாதுகாப்பார்கள் என்ற நம்பிக்கையும் தெரிவிக்கிறது. மற்றும் வகுப்புவாத உணர்ச்சிகளை நேரடியாகவோ, மறைமுகமாகவோ கிளப்பிவிடும் முயற்சிகளெல்லாம், பங்களாதேஷ் சுதந்திரத்துக்கே பேராபத்தாக முடியுமென்பதை உணர்ந்து, அதையெல்லாம் எதிர்த்து, முறியடிப்பார்கள் என்றும் பொலிட்பீரோ நம்புகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக பங்களாதேஷ் மக்கள், தங்களுடைய ஜனநாயக உரிமைகளையும், பிரஜா உரிமைகளையும் பாதுகாத்துக் கொள்ளும்போதே, அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கபட சூழ்ச்சிகளையும் திரைவிலக்கி அம்பலப்படுத்துவதற்கு தம்மாலான சகல காரியங்களிலும் ஈடுபடுவார்கள் என்றும் பொலிட்பீரோ நம்புகிறது.

### கோவை விவசாயத் தொழிலாளர்கள்

# போராட்டம் வெற்றி

கோவை, ஜன, 17—
ஜனவரி முதல் கோவை வையாபுரிபுதூர் பகுதித் தொழிலாளர்கள் கூலிஉயர்வுக்காக நடத்திய போராட்டம் சென்ற எட்டு நாட்களாக நடைபெற்று வெற்றியாக முடிந்தது.

ஜன. 14ந் தேதியன்று தொழிலாளர் பிரதிநிதிகளுக்கும், நிலச்சொந்தக்காரர்கள் பிரதிநிதிகளுக்குமிடையே நடந்த நேரடிப் பேச்சுவார்த்தையில் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி ஆண், பெண் தொழிலாளர்களுக்கு கூலிஉயர்வு கீழ்க்கண்டபடி கிடைத்துள்ளது.

ஆண் தொழிலாளி காலை 8 மணி முதல் 11மணிவரை-காலை 11-30 முதல் 2 மணி வரையும் வேலை செய்தால் (6 மணி நேரம்) ஒரு நாள் வேலை. அதற்கு ரூ. 5-00 கூலி.

பெண் தொழிலாளிகள் காலை 8-30 மணி முதல் 12-30 வரையிலும், மாலை 2 மணி முதல் 5-30 வரையிலும, ($7\frac{1}{2}$ மணி நேரம்) வேலை செய்தால் ரூ. 2—30 கூலி கிடைக்கும். இப்பெண்களும், ஆண்களும் கரும்புத் தோட்டத்தில வேலை செய்பவர்களாவர்.

#### மற்ற வேலைகள்

ஆண்கள் காலை 8 மணி முதல் 12 மணி வரை, மாலை 2 மணி முதல் 6 மணி வரை (8 மணி நேரம்) வேலை செய்தால் தினம் ரூ. 5—00 கூலி கிடைக்கும். வண்டியோட்டுதல், குப்பை வாருதல் ஏறு உழுவது, மண் வெட்டி வேலை போன்ற வேலைகளைச் செய்வார்கள்.

#### பண்ணையாட்கள்

பண்ணையாட்கள் வேலை நேரம் நிர்ணயமின்றி சகல விதமான வேலைகளையும் செய்து வருகிறார்கள். அவர்களுக்கு மிகக் குறைந்த மாதச் சம்பளம் தான் இப்போது கிடைக்கிறது. இவர்களுக்கு குறைந்தபட்சம் மாதம் ரூ. 150 தர வேண்டுமென்று கோரிக்கை வைக்கப்பட்டுள்ளது. அதன் மீது திருப்திகரமான முடிவு ஏற்படவில்லை என்பதால் பிரச்சனை தீரவில்லை. அதை மறுபடியும பேசி முடிக்க நிலச்சொந்தக்காரர்கள் உறுதியளித்துள்ளதால் பேச்சுவார்த்தை தள்ளி வைக்கப் பட்டுள்ளது.

சென்ற எட்டு நாட்களாக இத் தொழிலாளர்கள், பெரும் பாலும் ஹரிஜன ஏழைகள். ஆண்களும் பெண்களும் பல கஷ்டங்களுக்கு மத்தியில் கட்டுப்பாடாக நின்று போராடினார்கள். ஒருநாள் கூலியில்லாவிட்டால் கூடப்பட்டினி கிடக்கும் இத்தொழிலாளிகளுக்கு, சங்கத்தின் சார்பில தானியம் முதலியன வசூலித்து கஞ்சி வைத்துக் கொடுத்து, பாதுகாப்பு நடவடிக்கை எடுத்தார்கள். இப்போராட்டமும், கிளர்ச்சி, ஊர்வலம் கூட்டங்களும் சுற்றுப்புற கிராமங்களில் விவசாயத் தொழிலாளர்கள் மத்தியில் விழிப்பும், உற்சாகமும் ஏற்படுத்தியுள்ளது. பொங்கல் அன்று குனியமுத்தூர், நரசிம்மாபுரம், சுகுணாபுரம், மதுக்கரை ஆகிய இடங்களில் உள்ள மக்கள் ஒரு மூட்டைஅரிசிவசூல்செய்து போராடும் சகல தொழிலாளர்களுக்கும் உணவு வழங்கினார்கள்.

பேச்சுவார்த்தையில் மார்க்சிஸ்ட் கட்சியின் சார்பிலும் விவசாயத் தொழிலாளர் சங்க சார்பிலும் நமது தோழர்கள் எம். நஞ்சப்பன், கே. சுப்ரமணியம், கே. காரமடை, என். வி. தாமோதரன், சின்னதம்பி, சுந்தரம் ஆகியோரும். நிலச்சொந்தக்காரர்கள் பிரதிநிதிகளாக திருவாளர்கள் தேசிய செட்டியார், கந்தசாமிக் கவுண்டர், பெரியபண்ணை கவுண்டர், கண்ணையன் ஆகியோரும்கலந்துகொண்டார்கள்.

## இந்தியாவிலுள்ள பத்திரிகைகள்

புதுடெல்லி, ஜன. 15—
தற்பொழுது இந்தியாவில் சிறிய, பெரிய பத்திரிகைகள் மொத்தம் 11,000 விற்பனையில் உள்ளன. கிராமப் புறங்களில் 2 சதவீதமும், நகர்ப்புறங்களில் 98 சதவீதமும் பத்திரிகைகள் விற்கப்படுகின்றன.

இத்தகவலை மத்திய செய்தித்துறை அமைச்சர் திரு. குஜ்ரால் அறிவித்துள்ளார்.

(4-ம் பத்தித் தொடர்ச்சி)

கள் வெறும் 9 புள்ளிகளே உயர்ந்துள்ளன என்று காட்டுகிறது.

#### காங்கிரஸ் அரசின் திட்டமிட்ட மோசடி

இதுஎதைக்காட்டுகிறது? கடுமையானவிலைவாசிஉயர்வுபற்றிய விபரங்கள் அரசாங்கம் எடுக்கும் உபயோகப் பொருள் விலைவாசிப் புள்ளி கணக்கீட்டில் கூட பிரதிபலிக்க வில்லை என்பதைத் தானே காட்டுகிறது.

கடந்த 7 ஆண்டுகளில் மட்டும் மக்கள் அன்றாடம் உபயோகிக்கும் பண்டங்களின் மொத்த விலை வாசிப் புள்ளி 150 சதமானம்உயர்ந்துள்ளன. அதாவது கடந்த இரண்டு ஆண்டுகளில் மட்டுமே இந்தவிலைவாசிப்புள்ளி 60 சதமானம் உயர்த்தப்படுகிறது.

ஆனால் இத்தகைய பயங்கரமான விலைவாசி உயர்வு, தொழிலாளர் வாழ்க்கைச் செலவு குறியீட்டெண் கணக்கீட்டில் பிரதி பலிக்கவில்லை.

#### சம்பள முடக்கம்

அரசாங்கத்தின் திட்டமிட்ட மோசடியே இந்த புள்ளிவிவர மோசடி, காங்கிரஸ் ஆட்சியாளர்களின் சம்பள முடக்க கொள்கையின் ஒரு பகுதியே இந்த விலைவாசிப்புள்ளி மோசடி என்று தோழர் எஸ். ஒய். கோல்காட்கர் குற்றம் சாட்டினார்.

# ★ பஸ்கள் ஓடவில்லை
# ★ ஆயிரக்கணக்கானோர் கைது
# மராட்டியத்தில் பரிபூரண 'பந்த்'

**பம்பாய், ஜன, 16—**

**பஸ் கட்டண உயர்வை எதிர்த்து நேற்று மராட்டிய மாநில முழுமையும் நடைபெற்ற 'பந்த்' வெற்றி கரமாக நடைபெற்றது. பஸ் கட்டண உயர்வை எதிர்த்து நடைபெறுகின்ற இந்த 'பந்த்' தொடர்ந்து 16,17 தேதி களிலும் நடைபெறும். இந்த 'பந்த்'திலிருந்து சிவசேனை ஒதுங்கிவிட்டது. மார்க்சிஸ்ட் கட்சி, சோசலிஸ்ட் கட்சி, வலது கம்யூனிஸ்ட் கட்சி, ஜனசங்கம், குடியரசுக் கட்சி ஆகிய எதிர்க்கட்சிகள் கூட்டாக இந்த 'பந்த்'திற்கு அறைகூவல் விடுத்திருந்தன.**

பம்பாய் நகரில் 'பந்த்' வெற்றிகரமாக நடைபெற்றது. பலத்த போலீஸ் காவலுடன் சில பகுதிகளில் பஸ்கள் ஓட்டப்பட்டன. எனினும் இந்த பஸ்களில் ஒருவர் கூட ஏறிச் செல்லவில்லை. அரசாங்கத்தரப்பு அறிக்கையே பஸ்களில் 80 சதமானம் காலியாகத்தான் சென்றன என்று கூறுகின்றன.

### அரசின் முயற்சி படுதோல்வி

பஸ் கட்டண உயர்வை எதிர்த்து எதிர்கட்சிகள் கூட்டாக நடத்தும் இந்த 'பந்த்'தை சீர்குலைக்க மராட்டியமாநில காங்கிரஸ் அரசு செய்த அனைத்து முயற்சிகளும் படுதோல்வியடைந்தன.

மராட்டிய மாநிலம் முழுவதிலும் 5 பேருக்கு மேல வீதிகளில் செல்லக்கூடாது என்று தடைச் சட்டம் விதிக்கப்பட்டது. மற்றும் முன்னெச்சரிக்கையாக அனைத்துக் கட்சிகளையும் சேர்ந்த ஆயிரக்கணக்கான தொண்டர்கள் கைதுசெய்யப்பட்டும் 'பந்த்' வெற்றிகரமாக நடைபெற்றது.

### பம்பாய்

பம்பாய் நகரில் பந்த் முழு வெற்றியுடன் நடைபெற்றது. பம்பாய் மத்திய பஸ் நிலையத்தின் முன்பு அதிகாலை நான்கு மணிககு பஸ்களை செல்லவிடாமல் தடுத்து நிறுத்தி சத்தியாகிரகம் செய்த தொண்டர்களில் 400 தொண்டர்கள் கைது செய்யப்பட்டனர்.

மராட்டிய மாநிலம் முழுவதும் இந்த 'பந்த்' சமபந்தமாக 1134 பேர் கைதுசெய்யப்பட்டுள்ளதாக மராட்டிய மாநில உள்துறை அமைச்சர் திரு. சராத் பாவர் அறிவித்தார்.

### ஏராளமான பெண்கள் கைது

அதுபோலவே பம்பாயின் ஒரு பகுதியான லால் பார்க்கில் பஸ் முன் சத்தியாகிரகம் செய்த ஏராளமான பெண்தொண்டர்கள் கைது செய்யப்பட்டனர். மற்றும நூற்றுக் கணக்கான மார்க்சிஸ்ட் கட்சி, சோசலிஸ்ட் கட்சி, வலது கமயூனிஸ்ட் கட்சி, குடியரசுக் கட்சித் தொண்டர்கள் கைது செய்யப்பட்டனர்.

மராட்டிய மாநிலத்தையே ஸ்தம்பிக்க வைத்துள்ள இந்த 'பந்த்'தில் சிவசேனை கலந்துகொள்ளவில்லை. இதுபற்றி சிவசேனைத் தலைவர் பால்தாக்கரேயிடம் நிருபர்கள் கேட்டதற்கு இந்த பந்த்திற்கு சிவசேனை தார்மீக ஆதரவு தரும் என்று பதிலளித்தார்.

### தலைவர்கள் கைது

திங்கட்கிழமையன்று நடைபெற்ற முதல்நாள் 'பந்த்'தின்போது மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஏ.பி. சாவங் மற்றும் சோசலிஸ்ட்கட்சித் தலைவர் திரு. வசுதேசாய், வலது கமயூனிஸ்ட் தலைவர்களான ஜி. பி. நாஞ்சாரியா, திருமதி. சரோஜினி தேசாய், குடியரசுக் கட்சித் தலைவர் திரு. சமாங் கெய்க்வாட் ஆகியோர் கைது செய்யப்பட்டனர்.

### சமூக விரோதியும் அரசியல் தலைவரும் ஒன்ரு?

'பந்த்' நடைபெறுவதற்கு முன்பே டெல்லியிலிருந்து வந்திறங்கிய சோசலிஸ்ட் கட்சி கவுன்சிலர் திரு. நாரயண் திவேதி குற்றப் பிரிவின்படி கைது செய்யப்பட்டார். இதுபோலவே ஏராளமானோர் குற்றச் சட்டம 151-வது பிரிவின்படி கைது செய்யப்பட்டுள்ளனர். மராட்டிய மாநில அரசின் இப்போக்கிற்கு அனைத்து எதிர் கட்சித்தலைவர்களும் கண்டனம் செய்துள்ளனர். ஏனெனில் குற்றச்சட்டம் 151-வது பிரிவின்படி சமூக விரோதிகள்தான் கைது செய்யப்படுவார்கள். அதே சட்டப்பிரிவின்படி அரசியல் கட்சி ஊழியர்களையும் கைது செய்வதா? என்று அனைத்துக் கட்சியினரும் கடும் ஆட்சேபம் தெரிவித்துள்ளனர்.

மற்றும் பம்பாய், தானு, பிவாந்தி, கல்யாண், தாகானு டிவிசன்களில் பெரும்பாலன பஸ்கள் ஓடவில்லை. இப்பகுதியில் சத்தியாகிரசம் செய்த நூற்றுக் கணக்கான தொண்டர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

### சங்காலியில்

சங்காலி மாவட்டத்தில் பஸ் போக்குவரத்து முற்றிலும்பாதிக்கப்பட்டுவிட்டது. இந்த மாவட்டத்தில் ஒரு பஸ்கூட ஓடவிடாமல் பொது மக்களின் பூரண ஒத்துழைப்புடன் சத்தியாகிரகிகள் மறியல் செய்து தடுத்துவிட்டனர்.

சிவாஜி நகர் பகுதியில் பஸ் முன் மறியல் செய்த 12 தொண்டர்கள் கைது செய்யப்பட்டனர்.

### ரத்னகிரி

ரத்னகிரி மாவட்டத்தில் 'பந்த்' நூற்றுக்குநூறு வெற்றிகரமாக நடைபெற்றது. இப்பகுதியில் எல்லா வியாபார ஸ்தாபனங்களும் பெரிய தொழில் நிறுவனங்களும் மூடப்பட்டுக் கிடந்தன. ஒரு பள்ளிக்கூடமும் கல்லூரியும் நடைபெறவில்லை. அனைத்து கல்வி ஸ்தாபனங்களும் மூடப்பட்டன.

### அகோலா

அகோலாவில் சத்தியாகிரகம் செய்த தொண்டர்களில் 15 பேர் கைது செய்யப்பட்டனர் இந்த மாவட்டத்தில் போலீஸ் பாதுகாவலுடன்சென்ற ஒருசில பஸ்களிலும் ஒருவர் கூட ஏறவில்லை.

### கோல்ஹாபூர்

கோல்ஹாபூர் பகுதியிலும் பந்த் வெற்றிகரமாக நடைபெற்றது. இப்பகுதியில் சத்தியாகிரகம் செய்த 60 தொண்டர்கள் கைது செய்யப்பட்டனர்.

### நாகபுரி

நாகபுரி பகுதியில் 'பந்த்' முழு வெற்றியுடன் நடைபெற்றது. இப்பகுதியில் முன்னெச்சரிக்கையாக ஏராளமான அரசியல்கட்சி ஊழியர்கள் கைது செய்யப்பட்டனர்.

### பூனு பகுதி

பூனு பகுதியிலும் 'பந்த்' முழு வெற்றியுடன் நடைபெற்றது.

சாஸ்வத், பராமதி பகுதியில் பஸ் போக்குவரத்து முழுமையாக ஸ்தம்பித்தது. ஒரு பஸ் கூட ஓடவில்லை. பூனு மாவட்டத்தில் 80க்கும் அதிகமான சத்தியாகிரகிகள் கைது செய்யப்பட்தாக அரசாங்க குறிப்புகள் கூறுகின்றன.

சஸ்வத், புரானன்கர் தாலுகாவில் பல்லாயிரக் கணக்கான தொண்டர்கள் சத்தியாகிரகத்தில் கலந்து கொண்டனர். அரசாங்க குறிப்பே இப்பகுதியில் 5 ஆயிரம் தொண்டர்கள் கலந்து கொண்டதாக கூறுகிறது.

### இரவு நேர பஸ் ரத்து

மேலும் மராட்டிய மாநில அரசு மாநிலம் முழுவதிலும் 'பந்த' நடைபெறும் இம் மூன்று நாட்களில் இரவு நேர பஸ் சர்வீஸ்களை ரத்து செய்து விட்டதாக அறிவித்துள்ளது.

### போராட்டம் தொடரும் தலைவர்கள் அறிவிப்பு

பஸ் கட்டண உயர்வைக் கண்டித்து நடக்கும் இந்த மூன்று நாள் 'பந்த்'போராட்டத்தை தொடர்ந்து நடத்த சர்வகடசி போராட்டக்குழு முடிவு செய்துள்ளது.

திங்கட்கிழமையன்று இரவு நடந்த போராட்டக் கமிட்டி கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்களான தோழர்கள், பி. கே குரானே, அகய்யாரங்கனேகர், மற்றும் சோசலிஸ்ட் கட்சித்தலைவர் ஜகனுத் ஜாதவ், ராம்நாயக் (ஜனசங்) ஆர். ஜே. ரூகி (குடியரசு கடசி), மோகன் குலசேகர் (பரவாசி சங்கம்) ஆகியோர் கவந்து கொண்டனர்.

## தமிழக சட்ட மன்றக் கூட்டம்

சென்னை, ஜன. 17—

தமிழக சட்ட சபை—மேல் சபையின் கூட்டம் பிப் 2ல் காலை 11 மணிக்கு கூடும் என கவர்னர் அறிவித்துள்ளார். இக்கூட்டத்தில் கவர்னர் உரையாற்றுவார்.

## மார்க்சிஸ்ட் கட்சிஒன்றைத்தவிர அனைத்துக் கட்சிகளிலும் "ஆயாராம் - கயாராம்"கள்

| கட்சிகளின் பெயர் | | மொத்த சட்டமன்ற உறுப்பினர்கள் | பிற கட்சிகளிலிருந்து வந்து சேர்ந்தவர்கள் | பிற கட்சிகளுக்கு ஓடிப் போனவர்கள் |
|---|---|---|---|---|
| காங்கிரஸ் | ... | 1692 | 139 | 175 |
| சுதந்திரா | ... | 257 | 2 | 29 |
| சம்யுக்த சோஷலிஸ்ட் | ... | 180 | 4 | 15 |
| பிரஜா சோஷலிஸ்ட் | ... | 106 | 2 | 11 |
| ஜனசங்கம் | ... | 263 | 3 | 16 |
| வலது கம்யூனிஸ்ட் | ... | 121 | 1 | 2 |
| மார்க்சிஸ்ட் | | 128 | — | — |
| அகாலி தளம் | ... | 24 | — | 11 |
| பங்களா காங்கிரஸ் | ... | 34 | — | 17 |

மேலே கூறப்பட்டவை, மத்திய அரசின் உள்துறை அமைச்சகத்தால், வெளியிடப்பட்ட கட்சிவிட்டு கட்சி மாறிபவர்கள் பற்றிய அறிக்கையில் உள்ள புள்ளி விவரங்களாகும்.

இதில், 1967 மார்ச் முதல் 1968 பிப்ரவரிக்குள் —பதவி ஆசையும், பண ஆசையும் பிடித்து கட்சி விட்டு கட்சி மாறியவர்களின் எண்ணிகை மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆனல், அதற்குப் பின்னல், காங்கிரஸ் கட்சி இரண்டாக உடைந்தது தி. மு. க. போன்ற கட்சிகளும் பிளவுபட்டன. பதவியும் பணமும் விளையாடின; சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்களை வருக, வருகவென அழைத்தன. அதனல் கட்சி மாறிய எம். எல். ஏ. க்களும், எம். பி.க்களும் ஏராளம்.

இந்த "ஆயாராம், கயாராம்" என்ற கட்சி விட்டு கட்சி தாவும் நோய், அகில இந்தியக் கட்சிகள் என்று சொல்லப்படும் எல்லாக் கட்சிகளையும் பீடித்துள்ளது, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைத் தவிர.

ஆம், 1967—68-ல் மட்டுமல்ல, இன்றுவரை மார்க்சிஸ்ட் கட்சியிலிருந்து எந்தவொரு எம். எல். ஏ.வும் அல்லது எம். பி. யும் பிற கட்சிகளுக்குப் போனதில்லை. அதே போல், பிற கட்சிகளிலிருந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு வந்து சேரவுமில்லை என்பது வெள்ளிடை மலை.

## இந்திய தேசிய ராணுவ வீரர்களே
# நீங்கள் யார் பக்கம்?
## வரலாறு கூறும் உண்மை யாது?

(கோ. பாரதிமோகன்)

### ஜனவரி இருபத்தி மூன்றும் நாள் !

இந்திய தேச பக்தரும், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்பு வீரரும், தீவிர வாதியும், வங்க புதல்வருமான நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் பிறந்தநாள்! நேதாஜியின் அரசியல், பொருளாதார கருத்துக்களில் நமக்கு அடிப்படையான வேறுபாடுகள் உண்டு ஆனல், அவருடைய பிரிட்டிஷ் எதிர்ப்பு உணர்வும், தியாகமும் என்றென்றும் போற்றப்படும்.

இந்தியாவிலுள்ள சுமார் 25,000 இந்திய தேசிய ராணுவ வீரர்களும், நேதாஜி ஆதரவாளர்களும்- சுதந்திர இந்தியாவின் வெள்ளி விழா ஆண்டில் இந்திய தேசிய ராணுவ வீரர்களை "தியாகிகளாக" அங்கீகரிக்க வேண்டுமெனறும், நேதாஜி அவர்களின் சேவைகளை பாராட்ட வேண்டுமென்றும், இடைவிடாது கோரினர். நாடாளுமன்ற உறுப்பினர் திரு. சமர் குஹா அவர்கள் பிரதம மந்திரி—திருமதி இந்திரா காந்தி அம்மையாருக்கு உருக்கமான கடிதம் எழுதிவிட்டு உண்ணுவிரதமிருந்தார்.

மற்றொருபுறம் "நேதாஜிஅவர்கள் உயிருடன் இருக்கிருர்!" என்று சிலர் அறிவிப்புகள் விட்டுக்கொண்டிருக்கின்றனர் இங்கிலயில் நேதாஜி உயிருடன் இருக்கிருரா? இல்லையா? என்பதை விசாரிப்பதற்கு கமிஷன் நியமிக்கப்பட்டு, பல ஆண்டுகளாக—"நீண்ட தீவிர" விசாரணை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இவைகள் அனைத்தும், நேதாஜி அவர்களின் பெயரால் இந்த நாட்டில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் நிகழ்ச்சிகளாகும்.

### மத்திய அரசின் பாரம்பரியம்

எந்த மத்திய அரசிடம் இவர்கள் பாராட்டும், தியாகி பட்டமும் கோருகிருர்களோ, அந்த மத்திய அரசின் தலைவர்களின் பாரம்பரியத்தை கவனத்தில் கொள்வது நல்லது.

சுதந்திரப் போராட்டத்தில் அமரர்களான பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் மூவருக்கும் பிரிட்டிஷ் அரசு தூக்கு தண்டனை விதித்ததை அனைவரும் அறிவர். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்பு உணர்ச்சி புதிய கட்டத்தை எட்டியது. தூக்கு தண்டனையை ரத்து செய்யக்கோரி நாடெங்கிலும் கிளர்ச்சிகள் நடந்தன.

வெகுஜன எழுச்சி வீறுகொண்டு கிளர்ந்த நேரங்களிலெல்லாம ஏகாதிபத்திபத்திடம் - எழுச்சியை காட்டி- சமரசம் செய்து கொண்ட—காங்கிரஸ் தலைமை - வைஸ்ராயிடம் பேச்சு வார்த்தை நடத்தும் பொழுது "பகத்சிங், ராஜகுரு சுகதேவ் மூவரின் தூக்கு தண்டனையை ரத்து செய்" என்று கோரவில்லை. மூவருக்கும் தூக்கு தண்டனை நிறைவேற்றப்பட்டன.

நேதாஜியின் நண்பரும், பார்வர்ட்பிளாக்கட்சியின் பெருந்தலைவருமான, திரு. ஹேமந்குமார் பாசுவை படுகொலை புரிந்தது மத்திய அரசை ஆளும் காங்கிரஸ் கட்சியே! மேற்கு வங்கத்தில் கோர கொடுங்கோன்மை புரிந்து—படுகொலைகள் நடத்தி—ஜனநாயகத்தை சீர்குலைக்கும் கட்சி—காங்கிரஸ் கட்சியே!

### தியாகத்திற்கு விலையா?

இந்த வழியில் செல்லும், மத்திய அரசின் "பாராட்டுகளும்", "தாமிரபத்திரங்களும்" தேவைதானு? தியாகத்தை விலைப் பொருளாக்கி-சரக்காக்கி—சந்தையில் விற்று லாபம் தேடும்—இவர்களின் "நிபதியை" நாம் ஏற்றுக்கொள்ளலாமா? ஏற்றுக்கொள்ள முடியாது! ஏற்றுக் கொள்ளவும் கூடாது! அதை நாம் நிராகரிக்கவேண்டும். நேதாஜியின் தியாகமும், தென்கிழக்காசியாவில் நடைபெற்ற போரில் மடிந்த சுமார் 36000 இந்தியர்களின் தியாகமும், எந்தப் பாராட்டையும், பத்திரத்தையும் எதிர்பார்த்ததல்ல. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பர்மா, சயாம், மலாயா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளை சுரண்டிக் கொழுத்துக் கொண்டிருந்தன. இந்த நாடுகளில் கணிசமான அளவு இந்தியர்கள் வசித்து வந்தனர். குறிப்பாக மலாயாவிலும், சிங்கப்பூரிலும் வாழ்ந்த இந்தியர்கள் அந்த நாட்டில் வசித்து வந்த சீன, மலாய் மக்களுடன் இணைந்து வாழ்ந்தனர். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்பு போராட்டங்களிலும், ஞாயிறு விடுமுறை, எட்டு மணி நேர வேலை என்ற தொழிலாளர்போராட்டங்களிலும் இணைந்து நின்று போராடினர். இந்தப் போராட்டங்களின் வளர்ச்சியினுல் இந்திய, சீன, மலாய் சமூகங்களுக்கிடையில் ஒற்றுமை வலுவடைந்து வந்தன. இதனுல், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய எதிர்ப்பு உணர்வு கொழுந்து விட்டு எரியத் தொடங்கின.

இந்தக் கட்டத்தில் இரண்டாவது உலகப்போர் குண்டு முழக்கத்துடன் துவங்கியது. தென்கிழக்காசிய போர் முனையில் ஜப்பானிய பாஸிஸ்ட்டுகள் மிருகத்தனமாகத் தாக்கினர். பர்மா நிபந்தனையின்றி சரணுகதி அடைந்தது சயாம் ஜப்பானிடம் மண்டியிட்டது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தாக்குபிடிக்க முடியாமல், மலாயாவில் போலி தாக்குதலை நடத்திக கொண்டே பின் வாங்கி ஓடிக்கொண்டிருந்தது. இறுதியில் சிங்கப்பூர் தீவில் புகுந்து கொண்டு சேகரித்து வைத்திருந்த லட்சணக்கான 'பேரல்" எண்ணெயை கடலில் கொட்டி — கடலையே கொளுத்தி விட்டது இதனுல் ஜப்பானியர்களுக்கு சிங்கப்பூரை வீழ்த்த பதினைந்து நாட்கள தேவைப்பட்டன.

### ஜப்பானிய பாசிஸ்ட்களின் அக்கிரமம்

பிரிட்டிஷ் தோட்ட முதலாளிகளும், தொழிற்சாலை அதிபர்களும், செல்வங்களை திரட்டிக் கொண்டு விமானங்களில் பறந்தனர். சிலர் அண்டை நாடுகளுக்குச் சென்று பதுங்கிக் கொண்டனர். பிரிட்டிஸ் ராணுவம் நிராதரவாக விடப்பட்டன. இந்திய பிரிவு—இந்திய மக்களுடன் கலந்து கொண்டது, தொழிலாளிகளாக மாறினர்.

ஜப்பானிய பாஸிஸ்ட் ராணுவம், மனித குலம் அருமையாக பாதுகாக்கும் அனைத்தையும் அழிக்கும் நோக்கத்துடன் பயங்கரமாக மக்கள் மீது பாய்ந்தது. பெண்களையும், சிறுமிகளையும் கண்ட இடததிலேயே கூட்டாக மானபங்கப்படுத்திக் கொன்றனர். இதனுல், பெண்களையும், சிறுமிகளையும் கண்களில் காட்டாமல் மறைத்து வைக்க வேண்டியதாகிவிட்டது பெண்கள் அணியும் துணிகளைக் கணடுவிட்டால் அந்த வீட்டிலுள்ள ஆடவர்கள் அனைவரையுமு தாக்கி மறைவிடத்தைக் காட்டக் கோரி சித்திரவதை செய்தனர்.

சீன சமூகத்தை பூண்டோடு அழிக்கும் நோக்கத்துடன், கண்ணில்பட்ட சீனர்கள் அனைவரையும், அவர்கள் கரங்களில் மண் வெட்டியைக் கொடுத்து குழி தோண்டச் செய்து அந்தப் பெரும் குழிகளில் கூட்டம் கூட்டமாக சீனர்களை கண்ட துண்டமாக வெட்டிப் போட்டனர் ஜப்பானியர்கள். இது அன்ருட நிகழ்ச்சியாக நடந்தன.

ஜப்பானிய ராணுவ அதிகாரிகள் ஒவ்வொருவரும், தன்னிடம் ஓர் பெரிய முததிரை கட்டையை வைத்திருப்பார்கள். தொழிலாளிகளை கடுமையாக வேலை வாங்குவார்கள் மாலையில் நறுக்கி வைததிருக்கும் துண்டு தாள்களில் முத்திரையை பதித்து தாள்களை கொடுப்பார்கள். அது நாணயமாகும் அந்த நோட்டுக்கு "எண்" கிடையாது. ஒவ்வொரு அதிகாரிகளும், இதுபோல் பல்லாயிரம் 'தாள்களை" வெளியிட்டுக் கொண்டிருந்தனர். "உணவுப் பொருள்கள் அனைத்தும், ஜப்பானியருக்கே"—இது "ஜபபானிய பாஸிஸ்ட் ராணுவ ஆட்சியாகும்."

இந்தக் கொடுமைகளை எதிர்த்து, ஜப்பானிய பாஸிஸ்டகளை எதிர்ததுப் போராடுவது என்பது மனித வாழ்வின் முதல் கடமையாகிவிட்டது இந்திய, சீன, மலாய் சமூகத்தினர்கள் ஒன்றுசேர்ந்து நின்றனர். "ஜப்பானிய பாஸிஸ்ட் எதிர்ப்பு முன்னணி" அமைத்தனர். பாஸிஸ்ட் எதிர்ப்பு ராணுவமும் அமைத்தனர். சிகப்புக் கொடியில் பொன் நிறமான மூன்று நட்சத்திரம் பொறித்தனர் இந்தக் கொடியுடன் பாஸிஸ்ட்களை எதிர்த்து நாடு முழுதும், கடும் தாக்குதல்கள் ராணுவ ரீதியில் தொடுக்கப்பட்டன. மானத்துடன் வாழவிடாத பாஸிஸ்ட்களை எதிர்த்து— இளம் சகோதரிகள் ஆயுதம் தாங்கி தீரத்துடன் போரிட்டனர்.

இந்த தாக்குதலைக் கண்ட பாஸிஸ்ட் ஜப்பானியர்கள், கதிகலங்கினர். மூன்று சமூகத்தின் ஒற்றுமையைக் கண்டு பீதி அடைந்தனர்.

— நாளை முடியும்

## இ. ஐ. டி. பாரி கம்பெனி ஊழியர்
# வேலை நிறுத்தம்
## இன்று 20-வது நாள்
## தொழிலாளர்களும் வேலை நிறுத்தத்தில் இறங்கினர்

நெல்லிக்குப்பம், ஜன 18—

தங்களது நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றக்கோரி நெல்லிக்குப்பம் இ. ஐ. டி. பாரி கம்பெனி ஊழியர்கள் கடந்த 20 நாட்களாக வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

ஊழியர்களது இந்த நியாயமான சாதாரண கோரிக்கைகளை நிறைவேற்ருது நிர்வாகம் அடம்பிடிக்கிறது.

நிர்வாகத்தின் இந்தப் போக்கைக் கண்டித்தும், போராடும் ஊழியர்களுக்கு ஆதரவு தெரிவித்தும் தங்களது சொந்தக்கோரிக்கைக்காகவும் இக்கம்பெனியைச் சேர்ந்த சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் அனைவரும் வேலைநிறுத்தத்தில் இறங்கியுள்ளனர்.

இப்போராட்டத்திற்கு சி. ஐ. டி. யூ. சங்கமும், இங்குள்ள ஏனைய தொழிலாளர்களும், பொதுமக்களும் பெருத்த ஆதரவு அளித்து வருகின்றனர்.

தங்களது கோரிக்கைகள் நிறைவேறும் வரை தொடர்ந்து உறுதியாகப் போராட ஊழியர்களும், தொழிலாளர்களும் முடிவு செய்துள்ளனர்.

### சி. ஐ. டி. யூ. மாநிலக் குழுவுக்கு நன்கொடை

மதுரை, ஜன. 16—

திருச்சி மாவட்ட பஞ்சாலைத் தொழிற்சங்கத்தின் கே. ஆர். எஸ். நாடா பேக்டரி கிளை ரூபாய் 40-ம், சென்னை மாதவரம் தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம் ரூபாய் 50-ம், குரோம் பேட்டை தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம் ரூபாய் 25-ம், சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழுவிற்கு நன்கொடையாக வழங்கியுள்ளன.

சம்பளம், பஞ்சப்படி பாக்கித் தொகை, தொழிலாளர்களுக்கு மொத்தமாகக் கொடுக்கப்பட்டபோது, சங்கங்கள் வசூலித்த நன்கொடையிலிருந்து இத்தொகைகள் கொடுக்கப்பட்டன.

(நமது தொழிற்சங்க நிருபர்.)

### திருத்தம்

16—1—73 அன்று வெளியான தீக்கதிரில் 3வது பக்கத்தில் தொழில் முடக்கத்திற்கு தோல பதனிடும் தொழிலாளர்கள் எதிர்ப்பு என்ற தலைப்பின் கீழ் வெளியான செய்தியில், 3வது பத்தியில் "கேரளத்தில் உள்ள சுமார் 400 தோல் ஷாப்புகளிலும்" என்று இருப்பதை "தமிழ்நாட்டில உள்ள சுமார் 400 தோல் ஷாப்புகளிலும் என்று திருத்தி வாசிக்கவும்.

### 2 மாதங்களில் 3 தடவை தேர்தல்அதிகாரிகள் மாற்றம்

புதுடெல்லி, ஜன. 18—

கடந்த இரண்டு மாதங்களில், 3 தடவை தலைமைத் தேர்தல் அதிகாரிகள் மாற்றப்பட்டுள்ளனர்.

புதிய தலைமைத்தேர்தல் அதிகாரியாக (கமிஷனர்) திரு. டி. சாமிநாதன் நியமிக்கப்பட்டுள்ளார். இவர் முன்னுள் அமைச்சரவைச் செயலாளராகப் பணியாற்றியவர்.

இவருக்கு முன்பு தலைமைத்தேர்தல் அதிகாரியாக இருந்த திரு. நாகேந்திரசிங் சர்வதேச நீதிமன்ற நீதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதால், அவருக்குப் பதிலாக சாமிநாதன் அந்தப் பதவியை ஏற்கிருர்

இரண்டு மாதங்களுக்கு முன்புதான் சென்வர்மாவுக்குப்பதிலாக நாகேந்திர சிங் தேர்தல் கமிசனராக பதவி ஏற்ருர்.

# கண்ணோட்டம்

## முதலாளிகளின் தொப்பைகளுக்கு முட்டுக் கொடுப்போரின் ஜனநாயகம்

"கம்யூனிஸ்ட் கட்சி ஜனநாயகத்தில் நம்பிக்கை இல்லாத கட்சி அதற்கு நாடாளுமன்ற முறைமீது நம்பிக்கை இல்லை...இந்திய மக்களோ ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். இந்திய குடியரசு ஜனநாயகக் குடியரசு.

இப்படிப்பட்ட இந்த இந்தியப் புண்ணிய பூமியில் ஜனநாயகத்தில் நம்பிக்கை இல்லாத...சர்வாதிகாரத்தில் நம்பிக்கையுள்ள......கம்யூனிஸ்ட் கட்சிக்கு இடமில்லை. அதை விட்டு வைக்கவும்கூடாது. நாட்டு மக்கள் அதை ஆதரிக்கவும்கூடாது"......

மேலே கண்டவாறு சிண்டிகேட் தலைவர்கள் காமராசரும், நிஜலிங்கப்பாவும், மொரார்ஜிதேசாயும் பேசுகிருர்கள்.

சிண்டிகேட் தலைவர்களைப் போலவே, காலஞ்சென்ற ராஜாஜி, மசானி, பிலுமோடி முதலிய சுதந்திரா கட்சித் தலைவர்களும் பேசுகிருர்கள்.

சிண்டிகேட், சுதந்திரா கட்சித் தலைவர்களைப் போலவே, வாஜ்பாய், பாலராஜ மதோக், ஷோண்டி முதலான ஜனசங்கத் தலைவர்களும் பேசுகிருர்கள்.

ரொம்ப ரொம்ப முற்போக்குபற்றி விழுந்து விழுந்து பேசுகின்ற சி. சுப்ரமணியம், சவாண், இலைமறை காய் மறையாக புது ரெக்ரூட் மோகன குமாரமங்கலம் போன்ற ஆளும் காங்கரஸ் தலைவர்களும் பேசுகிருர்கள்.

எல்லாவற்றுக்கும் மேலே-பொதுவுடைமைப் பூங்கா என்றும், மாஸ்கோவுக்குச் செல்லுவேன, மாலென்கோவிடம் சொல்லுவேன, மதனைட்டில் கம்யூனிஸ்ட் கட்சி தீண மூன கழுதான என்றும், காலஞ்சென்ற அண்ணதுரை அவர்களும், கருணாநிதி, நெடுஞ்செழியன், அன்பழகன் முதலான திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களும் அப்படித்தான் பேசுகிருர்கள்.

இன்னும் ஜனநாயகத்திலே ஊறித் ததும்பிய பேச்சாள ஊதுகுழல்களும், எழுத்தாள ஊறுகாய்களும் கம்யூனிஸ்டுகளுக்கு ஜனநாயகத்தின் மீது நம்பிக்கை இல்லையென்று சர்வசதா திரிகை திரித்துக் கொண்டே இருக்கின்றன!

இப்படியெல்லாம் பேசி, நம்மை ஜனநாயக விரோதிகள் என்று படம் பிடித்து, ஜனநாயக சக்திகளிடமிருந்து நம்மைத் தனித்து ஒதுக்கிட இவர்கள் முயற்சிக்கிருர்கள்

கம்யூனிஸ்ட் கட்சி சொல்லுவதுதான் உண்மையான ஜனநாயகமா அல்லது இந்த முதலாளிவர்க்க டமாரங்கள் சொல்லுவதுதான உண்மையான ஜனநாயகமா? —என்பதைச் சிறிது பார்ப்போம்.

முதலில் இந்தியாவிலும் சரி, வேறு எந்த முதலாளித்துவ நாட்டிலும் சரி, ஜனநாயக தேவதையை எப்படிச் சீவி முடித்துச் சிங்காரிக்கிருர்கள் என்பதைப் பார்ப்போம்.

இத்தனை பேரும் என்னதான் சோசலிசத்தைப் பற்றியும், மனிதாபிமானத்தைப் பற்றியும், விடிய விடிய சித்தரித்தாலும்கூட—இவர்கள் அனைவருமே பெரு முதலாளிகளையும், நிலப்பிரபுக்களையும் ஒழிப்பதில் உறுத்து இல்லாதவர்கள். உறுத்து இல்லாவிட்டாலும் போகிறது அவர்களைப் பல்வேறு வழிகளிலும், பலவாருன ரூபங்களிலும் வளர்த்து வருபவர்கள்.

பாட்டாளி மக்களைச் சுரண்டிக் கொள்ளையடித்துள்ள சுரண்டல் பூதங்களின் சொத்துக்களைப் பிடுங்கி, பாட்டாளி மக்களிடமே ஒப்படைக்க வேண்டுமென்ற புரட்சிகரமான உணர்வு இல்லாதவர்கள்.

அது மட்டுமல்ல, பாட்டாளி மக்களைச் சுரண்டுவதற்கு சட்ட உரிமை வழங்கியுள்ள இந்த சமூக அமைப்பை, ஜனநாயக சமுதாயம் என்று தத்துவ உபதேசம் செய்கிறவர்கள்.

இந்த ஜனநாயகத்தைத்தான், உழைப்பாளி மக்களை ஓட்டாண்டிகளாக ஆக்கும் ஜனநாயகம் என்கிருேம்.

உழைப்பாளி மக்களைச் சுரண்டிச் சேர்த்த அந்தச் செல்வத்தைக் கொண்டு அந்த பெரு முதலாளிகளும், நிலப் பிரபுக்களும் என்ன செய்கிருர்கள்?

ஜனநாயகத்தையா வளர்க்கிருர்கள்?

ஜனநாயக அவதாரங்களெல்லாம் இந்த கேள்விக்கு பதில் சொல்லி ஆகவேண்டும்.

ஜனநாயக அவதாரங்களே! உங்களைக் கேட்கிருேம்:

சுரண்டிக் குவித்த அந்தப் பணத்தைக் கொண்டு அவர்கள் என்ன செய்கிருர்கள்?

தேர்தல் சமயத்தில்,வாக்காளர்களின் மனச்சாட்சியின்படி வாக்களிக்க விடாமல், ஓட்டுக்குப் பணம் கொடுத்து, தனக்கோ, தனது வால பிடிக்கிகளுக்கோ வாக்களிக்குமடிச் செய்கிருர்கள்.

மனச்சாட்சிக்கு விரோதமாக ஏன் ஓட்டுப் போடுகிருர்கள் என்று மக்கள் மீது கேள்விகளை வீச வேண்டாம். அவர்களை அந்த அளவுக்கு வறுமைக் குழியிலே தள்ளிய கூட்டத்தைப் பார்த்துக் கேளுங்கள்.

தேர்தல் முடிந்த பிறகு இந்த ஜனநாயகத்தின் கதை என்ன தெரியுமா? தேர்ந்தெடுக்கப்பட்ட எம். எல். ஏ.க்களையும், எம். பி.களையும் பணம்கொடுத்து விலைக்கு வாங்கியிருக்கிருர்கள் என்பது யாருக்குதான் தெரியாது! இவர்களை மட்டுமென்ன? மத்திய, மாநில மந்திரிகளையே பைக்குள் போட்டு வைத்திருக்கிருர்களே! இது பொய்யா?

பெரும் பூதங்கள் மேலும் சுரண்டிக் கொழுப்பதற்கு ஏற்ற சட்டங்களைச் செய்வதற்காகத்தானே இப்படி மேலிடங்களை விலைக்கு வாங்குகிருர்கள்.

இந்த இடத்திலே என்ன ஜனநாயகம் வாழுது?

தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றங்களின் கதியும், நாடாளுமன்றத்தின் கதியுமே இப்படியானல்— தேர்ந்தெடுக்கப்படாத அரசாங்க நிர்வாக அதிகாரிகள் கதி எப்படி இருக்கும்?

ஒவ்வொரு இலாகாவின் கேந்திரமான அதிகாரிகளுக்கு அரசாங்க சம்பளம் தவிர, பெரும் முதலாளிகளின் சம்பளமும் கிடைக்கிறது. இந்த அதிகாரிகளைக் கையாளாக வைத்துக் கொண்டு அரசாங்க இரகசியங்களையும், பட்ஜெட் இரகசியங்களையும் தெரிந்துகொள்ளுகிருர்கள் முதலாளிகள்.

இந்த இடத்தில் எங்கே வாழுது ஜனநாயகம்?

உத்தியோகத்தில் இருக்கும்போதே, பெரு முதலாளிகளின் ஊழியர்களாக இருந்த இவர்கள், ரிட்டயர்டு ஆனபிறகு, அதே முதலாளிகளின் சங்கங்களுக்கு தலைவர்களாகவும், செயலாளர்களாகயும் ஆகியிருப்பது நமக்குத் தெரியாதா?

ரிசர்வ் பேங்கு கவர்னராயிருந்த எச். வி. அய்யங்கார், ரிட்டயர்டு ஆனபின், டாட்டா கம்பெனி ஏஜெண்டு ஆகவில்லையா?

சென்னை லேபர் கமிஷனராக இருந்த சி. ஜி. ரெட்டி, ரிட்டயர்டு ஆனபின், தென் இந்திய மில் முதலாளிகள் சங்கத்தின் காரியதரிசி ஆகவில்லையா?

இதையெல்லாம் அரசாங்கமும் அனுமதிக்கிறதா இல்லையா?

ஐயா, ஜனநாயக அவதாரங்களே! இதுதான் ஜனநாயகமா?

ஆம். இது ஜனநாயகம்தான்...... யாருக்கு?...... உங்களுக்கு...... உங்களது எஜமானர்களான தொப்பைகளுக்கு!...... எதற்காக?...... சுரண்டுவதற்காக......

ஆனல், உழைக்கும் வர்க்கங்களின் ஜனநாயகத்தில் இதுபோன்ற நீச காரியங்கள் எதுவுமே நடக்காது. உங்கள் ஜனநாயகத்தைப் பற்றி விளக்கியது இது மட்டும் போதுமா? இன்னும் கொஞ்சம் வேண்டுமா?

— ஐ. மா. பா.

---

### தொழிற்சங்கத்தில் சேர்ந்தால் வேலை நீக்கமா?

# மதுரை மோட்டார் தொழிலாளர் உண்ணாவிரதம்

மதுரை, ஜன 7,

தொழிற் சங்க இயக்கத்தில் ஈடுபட்ட ஐந்து தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்து பழிவாங்கியுள்ள மதுரை என். எஸ். சுவர்ணு ஓர்க்ஷாப் நிர்வாகத்தைக் கண்டித்து உண்ணாவிரதப் போராட்டம் நடந்து வருகிறது.

இந்த ஓர்க்ஷாப் தொழிலாளர்கள் அனைவரும் தங்களது உரிமைகளைப் பாதுகாக்க சி. ஐ. டி. யூ. சங்கமான மதுரை மோட்டார் தொழிலாளர் சங்கத்தில் சேர்ந்தனர்.

இதைக் கண்டு ஆத்திரமுற்ற நிர்வாகம், சங்கத்தின் முக்கிய ஊழியர்களான தோழர்கள் ஆர். அழகர்சாமி (கிரைண்டர்) பி. விஜயராமன் பொன்ராஜ் (டர்னர்கள்) சுப்புராயலு (பிட்டர்) லெட்சுமணன் (சூப்பர் வைசர்) ஆகியோரை எவ்விதக்காரணமுமின்றி வேலை நீக்கம் செய்தது.

நிர்வாகத்தின் இந்தத் தொழிலாளர் விரோதப் போக்கைக் கண்டித்து, முதல் கட்டமாக கம்பெனி முன்பு ஒரு வார காலம் எல்லாத் தொழிலாளர்களும் ஆர்ப்பாட்டம் செய்தனர். நிர்வாகம் இணங்கவில்லை.

எனவே, ஜன. 10ந் தேதி முதல டழிவாங்கப்பட்ட தொழிலாளர்களும் உண்ணாவிரதம் தொடங்கியுள்ளனர்.

வேலை கிடைக்கும்வரை தொடர்ந்துஉண்ணாவிரதம் இருப்பர்.

### சகோதரத் தொழிலாளர் ஆதரவு

இந்தப் போராட்டத்துக்கு அப்பகுதியில் உள்ள பஞ்சாலைத் தொழிலாளர்களும், மோட்டார் தொழிலாளர்களும், பொதுமக்களும்அணி அணியாக வந்து ஆதரவு தெரிவித்த வண்ணமுள்ளனர். போராட்ட நிதியாக ரூ. 100வரை வசூலித்துக் கொடுத்துள்ளார்கள்.

போராட்டம் துவங்கியதிலிருந்து, பழுதுபார்ப்பதற்காக இந்த ஓர்க்ஷாப்புக்கு வரவேண்டியபஸ். லாரிகள் ஒன்று கூட வரவில்லை.

---

### நடக்க இருப்பவை

#### பாப்பா உமாநாத் நிகழ்ச்சிகள்

ஜன 19 —திருக்காரவாசல் (நாகை வட்டம்)
20 —கள்ளப்புலியூர் (குடந்தை)
22 —பழங்கனுங்குடி (திருச்சி)
24 —மதுரை நகர்
26 —ஆக்கூர் (மாயூரம்)
28 —திருக்காட்டுப் பள்ளி (தஞ்சை)

---

### மதுரையில் இன்று போனஸ் கோரிக்கை தின ஊர்வலம்

மத்திய— மாநில அரசு, உள்ளாட்சித்துறை ஊழியர்கள் சார்பில் ஜன. 19-ந் தேதி மாலை 5—30 மணிக்கு கலெக்டர் அலுவலகத்திலிருந்து புறப்படும்.

---

# பிரிட்டனுடன் உறவை ரத்து செய்ய ஆஸ்திரேலியா முடிவு

லண்டன், ஜன. 17—

பிரிட்டனுடன் ஆஸ்திரேலியா கொண்டிருக்கும் உறவுகளை படிப்படியாக ரத்துசெய்து கொண்டு தன்னை தென் கிழக்காசிய பிராந்தியத்தைச் சார்ந்த நாடுகளுடன் ஒன்ருக ஆக்கிக்கொள்ள தொழிற்கட்சியின் தலைமையில் அமைந்துள்ள ஆஸ்திரேலியா அரசாங்கம் முடிவு செய்துள்ளது.

இந்த விபரத்தை லண்டனில் நடைபெற்ற சட்ட ஆலோசகர்கள் கூட்டமொன்றில் ஆஸ்திரேலியா அரசாங்கத்தின் அட்டர்னி ஜெனரல் லயோனல் மர்பி எனபவர் அறிவித்தார்.

இதன் ஒரு பகுதியாகவே ஆஸ்திரேலியாவின் வழக்குகளை லண்டனில் உள்ள பிரிவிகவுன்சிலுக்கு இறுதித் தீர்வுக்காக அப்பீல் செய்வது என்று இதுவரையில் இருந்துவந்த வழக்கத்தை ஆஸ்திரேலியா கைவிடப் போவதாகவும் அவர் அறிவித்தார்.

### புதிய நடவடிக்கைகள்

இதேபோல் இன்னும் சில நடவடிக்கைகளையும் புதிய ஆஸ்திரேலிய அரசாங்கம் எடுத்துள்ளது.

ஒரு காமென்வெல்த் தேசத்தின் பிரதமர் பதவியேற்பதற்குமுன்பு பிரிவி கவுன்சிலின் உறுப்பினர் என்றமுறையில் பிரமாணம் எடுத்துக் கொள்ளவேண்டும். ஆனல் புதிய தொழிற் கட்சிபிரதமரான கவுல்விட்லாம் என்பவர் இந்த பிரமாணத்தை தான் பிரதமர் பதவியேற்றபோது எடுக்கவில்லை.

### பட்டங்களை தூக்கியெறிந்தனர்

இதையடுத்து லண்டனிலிருந்து புத்தாண்டுதினத்தில் காமன்வெல்த் பிரஜைகளுக்கு பட்டங்கள் வழங்குவது வழக்கம். இந்தஆண்டு இந்தப்பட்டங்களை ஆஸ்திரேலியாநாட்டு குடிமக்கள் எவரும் பெற்றுக்கொள்ள கூடாது என்று பிரதமர் விட்லாம் வேண்டுகோள் ஒன்றை விடுத்துள்ளார்.

இந்த அடிப்படையில் இன்னும் பல்வேறு பண்டைய காலத்தியகாலனி ஆதிக்க உறவுகளை ஆஸ்திரேலியா கத்தரித்துக்கொள்ளப்போகிறது என்று அட்டர்னி ஜெனரல் மர்பி தெரிவித்தார்.

வெகு சீக்கிரத்தில் நடைபெற இருக்கும் காமன்வெல்த் பிரதமர்கள் மாநாட்டில் பிரதமர் விட்லாம் தன் நாட்டின் புதிய அந்தஸ்தை வெளியிடக்கூடும் என்று தெரிய வருகிறது.

ஆசிய—ஆப்பிரிக்க நாடுகளுடன் சகோதர உறவுடன ஆஸ்திரேலியா தன்னுடைய புதிய உறவுகளை அமைத்துக் கொள்ள எடுக்கப்படும் நடவடிக்கைகள் இவையென தெரிகிறது.

---

# தேர்வுகளை ஒத்திவைக்கவும்

## கல்லூரி முதல்வர்கள், மாணவர்கள் கோரிக்கை

திருச்சி, ஜன. 18—

பல்கலைக் கழகத் தேர்வுகளை ஒத்திப்போடும்படி திருச்சியில் உள்ளகல்லூரிகளைச் சேர்ந்த முதல்வர்களும், மாணவர்களும் பல்கலைக் கழகத்தை வேண்டியுள்ளனர்.

பல்கலைக் கழக விதிகளின் படி, கல்லூரிகள் ஒரு கல்வி ஆண்டுக்கு 180 நாட்கள் வேலை செய்தாக வேண்டும்.

ஆனல் காலாண்டுத் தேர்வுக்குப்பிறகு, கல்லூரிகள் திறக்கப்பட்டதும் கல்லூரிகள் பலநாட்கள்சரிவர

வர நடவாததாலும், இன்னும் பாடங்கள் நடத்த வேண்டியிருப்பதாலும் குறைந்தது இரு வாரங்களுக்காவது தேர்வுகளைத் தள்ளிப் போட வேண்டும் என்று கோரியுள்ளனர்.

---

(8ம் பத்தி தொடர்ச்சி)

அமெரிக்கப் படைகள் இருக்கவேண்டும் என்று வலியுறுத்தியுள்ளார்.

இவ்வாறு உலகமறிந்த ஏகாதிபத்தியப் படைகளை தங்கள் நாட்டிற்குள் அனுமதித்துள்ள இந்த தேச விரோதிகள் தங்களது மக்கள் விரோத ஆட்சியை எதிர்த்து மக்கள் கிளர்ந்தெழும் அந்த மாபெரும் எழுச்சிக்கு 'கம்யூனிஸ்ட் ஊடுருவல்" என்ற வர்ணம் பூசி அமெரிக்க ஏகாதிபத்தியப் படைகளின் முகாமை நியாயப் படுத்த பெரு முயற்சி செய்து கொண்டிருக்கிருர்கள்.

---

### பல நாடுகளில் அமெரிக்க தூதரகங்கள் ஸ்தம்பிப்பு

# பொம்மை அரசுகள் குலைநடுக்கம்

பாரிஸ், ஜன. 17—

**வீர வியட்னும் நாட்டின் மீது அமெரிக்க ஏகாதிபத்திய வெறியர்களின் மிருக வெறித்தாக்குதலை எதிர்த்து உலகெங்குமுள்ள மக்களும், அமெரிக்க மக்களும் தங்களது கடும் எதிர்ப்பைத் தெரிவித்துள்ளனர். பெரும் கண்டன ஆர்ப்பாட்டம் நடத்தி உலகெங்கும் அமெரிக்க தூதரகங்கள் செயல்படாவண்ணம் ஸ்தம்பிக்கச் செய்திருக்கிருர்கள்.**

**உலக மக்களின் நிர்ப்பந்தத்தால் விரைவில் வியட்னும் சமாதான உடன்பாடு ஏற்பட்டுவிடுமோ என்று கூலிப்படை ஜனுதிபதிகள் குலைநடுக்கம் கொண்டிருக்கிருர்கள்.**

பிரான்சு நாட்டின் தலைநகரான பாரிசில் நடக்கும் உலக சோசலிஸ்ட் கட்சிகளின் 12-வது மாநாடு வியட்னுமின் மீது குண்டு மாரி மொழியும் அமெரிக்க அரசாங்கத்தை வன்மையாகக் கண்டித்தது.

இம்மாநாட்டில் கலந்து கொண்ட 18 நாடுகளின் பிரதிநிதிகளும் ஏகமனதாக அமெரிக்காவின் மிருகத்தனமான குண்டு வீச்சைக் கண்டித்தனர்.

அமெரிக்காவின் வெறித்தனமான குண்டுவீச்சை பிரான்சு நாட்டின சோசலிஸ்ட் கட்சித்தலைவர் பிரான்கோஸ் மிட்டிராண்ட்டும், ஸ்காண்டிநேவிய நாட்டின் பிரதிநிதியும் வன்மையாகச் சாடினர்.

டென்மார்க் நாட்டின் சோசலிஸ்ட் கட்சி தலைவர் ஜூப்டென்யூல் பேசுகையில், வியட்னுமில் குண்டு வீச்சை நிறுத்த உலக நாடுகள் எல்லாம் அமெரிக்காவை நிர்ப்பந்தம் செய்ய வேண்டும். மேலும் அமெரிக்க ஜனுதிபதியை சந்திக்க ஒரு சர்வதேச தூது கோஷ்டியையும் அனுப்ப வேண்டும் என்று வலியுறுத்தினர்.

மற்றும் பிரிட்டன், ஸ்வீடன், ஆஸ்திரேலிய நாட்டு பிரதிநிதிகளும் அமெரிக்க குண்டு வீச்சை வன்மையாக கண்டித்தார்கள்.

### அமெரிக்காவுக்கு மே. ஜெர்மனி கடும் எச்சரிக்கை

வியட்னும் யுத்தத்தை நீடித்து நடத்திக்கொண்டே போனல் அமெரிக்காவுக்கும், மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே யுள்ள நட்புறவுக்கு பெரும் ஆபத்தாய் முடியும் என்று மேற்கு ஜெர்மனி அமெரிக்க அரசாங்கத்திற்கு எச்சரிக்கை விடுத்துள்ளது. மேற்கு ஜெர்மனியின் இந்த எச்சரிக்கையை நிதியமைச்சர் திரு ஹெல்மட் சுச்மிட் இங்கு அமெரிக்க, அதிகாரிகளிடம் தெரிவித்தார்.

### ஜெனிவாவில் அமெரிக்க தூதரகம் நொறுக்கப்பட்டது

வியட்னுமில் நடக்கும் மனிதத்தன்மையற்ற இரத்த வெறி பிடித்த அமெரிக்க குண்டுவீச்சைக் கண்டித்து சுவிட்சர்லாந்து நாட்டிலுள்ள ஜெனிவா நகரில் பெரும் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. பல்லாயிரக் கணக்கான மக்கள் அணிதிரண்டு அமெரிக்க குண்டு வீச்சைக் கண்டித்து ஆவேச முழக்கமிட்டனர்.

ஜெனிவா நகரிலுள்ள அமெரிக்க தூதரகம்முன்பு ஆர்ப்பாட்டம செய்த மக்கள்கோபாவேசம்கொண்டு அமெரிக்க தூதரகத்தின் மீது கையில் கிடைத்ததையெல்லாம் கொண்டு வீசினர். இதில் அமெரிக்க தூதுவாலயத்திற்குபெருத்த சேதம் ஏற்பட்டது. தற்போது அந்த பிரும்மாண்டமான கட்டிடத்தில் ஒரு கண்ணுடிச் சில்லு கூட பார்க்கமுடியாபடி உடைந்து நாசமாமிவிட்டது.

ஆர்ப்பாட்டம் செய்த மக்களைக்கலைக்க போலீசார் கண்ணீர் புகைக் குண்டுகளைவீசினர். சிதறியோடிய மக்கள்வழியிலிருந்த எல்லா அமெரிக்க பாங்குகளையும், வியாபார ஸ்தாபனங்களையும் உடைத்து நொறுக்கிவிட்டனர்.

### இத்தாலியில் வியட்நாம் ஆதரவு மாநாடு

இத்தாலி நாட்டின் தலைநகரான ரோம் நகரிலுள்ள இத்தாலி — வியட்னும் ஆதரவுகமிட்டி வியட்னுமில் சமாதானத்தை நிலைநாட்ட வலியுறுத்தி ரோம் நகரில் பிப்ரவரி 2ம் தேதியன்று ஒரு மாநாடு கூட்டப்போவதாக அறிவித்துள்ளது. இந்த மாநாடு பிப்ரவரி 4ம் தேதிவரை மூன்று நாட்கள் நடைபெறும். இந்த மாநாட்டிற்குவியட்னுமில்விரைவில் அமைதி காண வேண்டுமென்று விரும்பும் எல்லா நாடுகளும் முடிந்தால் தங்களது பிரதிநிதிகளை அனுப்ப வேண்டும் என்று இத்தாலி நாட்டு வியட்னும் ஆதரவு கமிட்டி அறைகூவல்விடுத்துள்ளது.

இந்த மாநாட்டில் கலந்து கொண்டு உலக நாடுகள் அனைத்தும் அக்டோபர் மாதம் ஏற்பட்ட வியட்னும் அமைதி ஒப்பந்தத்தில் அமெரிக்கா கையெழுத்திட்டு வியட்னுமில் சமாதானம் ஏற்பட வலியுறுத்தும் என்று இத்தாலிநாட்டு வியட்னும் ஆதரவு கமிட்டி அறிவித்துள்ளது.

### பொம்மை ஜனுதிபதிகள் நடுக்கம்

சிங்கப்பூர், ஜன. 17—

அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் இரத்த வெறி பிடித்த குண்டு வீச்சை உலகெங்குமுள்ள நாடுகள் வன்மையாகக் கண்டித்துள்ளன. அமெரிக்க அரசாங்கத்தைஎதிர்த்து அமெரிக்க மக்களே கொதித்தெழுந்துள்ளனர்.

இத்தகைய கடும் எதிர்ப்பினுல் வியட்னுமில் அமைதி காண விரைவில் உடன்பாடு ஏற்படும் சூழ்நிலை உருவாகியுள்ளது. இந்நிலை கண்டு தென் கிழக்காசியாவிலுள்ள பொம்மை அரசுகள் குலைநடுக்கம் கொண்டுள்ளன.

வியட்னுமில் யுத்தம் முடிந்தபின் தங்களது மக்கள் விரோத ஆட்சியை எதிர்த்து மக்கள் கொந்தளித்து எழுவர் என்று பீதியுற்றுள்ளனர். எனவே வியட்னும் யுத்தம் முடிந்த பின்பும் தென்கிழக்காசியாவிலுள்ள அமெரிக்கப்படைகள் ஓரளவாவது இருக்க வேண்டும்.

முழுமையாக வாபஸ் பெற்று விடக் கூடாது என்று சிங்கப்பூர் பொம்மை அரசும், தாய்லாந்து பொம்மை அரசும் பகிரங்கமாக அறிவித்துள்ளது.

### ஏகாதிபத்தியப் படைகளுக்கு அனுமதி

தாய்லாந்து நாட்டின் பொம்மை ஜனுதிபதி கானம் கிட்டிகாச்சோரன் இன்னும் ஒருபடி மேலே போய் இந்தோ சீன யுத்தம் முடிந்த பின்புகூட அமெரிக்கப் படைகள் விரும்பினுல் தாய்லாந்தில் முகாமிடலாம் என்று பகிரங்கமாக அறிவித்து ஏகாதிபத்தியப் படைகளுக்கு பட்டுக் கம்பளம் விரித்து வரவேற்றுள்ளார்

சிங்கப்பூர் நாட்டின் பொம்மை ஜனுதிபதி திரு. லீ குவான் யீ தாய்லாந்தில்

(5-ம் பத்தி பார்க்க)

---

### மேற்கு வங்கத்தில்

# நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் வேலை நிறுத்தம்

துர்க்காபூர், ஜன. 17—

மேற்கு வங்க மாநிலத்தில், அசன்சால்—துர்க்காபூர் பகுதிகளில் உள்ள நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் அனைவரும் கடந்த திங்கட்கிழமையன்று வேலை நிறுத்தம் செய்தனர்.

மூடப்பட்டுள்ள சுரங்கங்கள் அனைத்தையும் திறப்பது, ஊதியக் குழு சிபாரிசுகளை நிறைவேற்றக் கோரி இந்த வேலை நிறுத்தம் நடந்தது.

இந்த வேலை 'நிறுத்தத்துக்கு, இந்தியத் தொழிற் சங்க மையம் (சி. ஐ. டி. யூ), இந்து மஸ்தூர் சபா (எச். எம். எஸ்.), அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸ் (ஏ. ஐ. டி. யூ. சி.) இந்திய தேசிய தொழிற் சங்கக் காங்கிரஸ் (ஐ. என். டி. யூ. சி.) ஆகிய சங்கங்கள் வேண்டுகோள் விடுத்து, தலைமைவகித்தன.

ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் இந்த வேலைநிறுத்தத்திலும், அதையொட்டி நடந்த ஆர்ப்பாட்டங்களிலும் கலந்து கொண்டு தமதுகோரிக்கைகளை வலியுறுத்தினர்.

இந்தவேலை நிறுத்தத்தின் போது, ஐ. என். டி. யூ. சி. யைச் சேர்ந்த ராஜ்பார் என்பவர், நிர்வாகத்தின் அடியாட்களால் தாக்கப்பட்டார். படுகாயமடைந்த அவர் மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லப்பட்டு அனுமதிக்கப்பட்டுள்ளார்.

---

### ஏஜண்டு தோழர்களின்

# கவனத்துக்கு

மாநில செயற்குழுவின் முடிவுப்படி ஏஜண்டுகள் தற்போது பெற்றுக் கொண்டிருக்கும் பிரதிகளுக்கு உள்ள டெப்பாசிட்டை ஜனவரி 31-ந் தேதிக்குள் ரூ. 4—50 உயர்த்த வேண்டுமென்பது தெரிந்ததே.

எனவே இப்போதிருந்தே டெப்பாசிட் தொகையை படிப்படியாக உயர்த்தி ஜனவரி 31-க்குள் ரூ. 4—50 ஆக உயர்த்தக் கேட்டுக் கொள்கிருேம்.

ஒரே தவணையில் உயாத்துவது ஏஜண்டுத் தோழர்களுக்கு சிரமமாக இருக்கலாம். எனவே தான் இந்த வேண்டுகோள்.

நிர்வாகி,
தீக்கதிர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரைவீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் கே. முத்தையா